# சின்னஞ் சிறு சீனக் கதைகள்



தமிழாக்கம் தோ. பிச்சை

# சின்னஞ்சிறு
# சீனக் கதைகள்
# 50




தமிழாக்கம்:
திருவைகாவூர் கோ. பிச்சை




நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-98.

**CHINNANCHIRU CHEENA KATHAIKAL**

**Collected Chinese Short Stories**

Translation: **Thiruvaikavoor Ko. Pitchai**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியீடு

முதல் பதிப்பு : செப்டம்பர், 2000



Code No: A 1089

ISBN : 81 - 234 - 0676 - 2

**விலை : ரூ.35.00**

ஒளி அச்சு: **N C B H** கம்ப்யூட்டர்ஸ்

அச்சிட்டோர் : **அய்யனார் ஆஃப்செட்**
**18வது தெரு,**
**என்.எஸ்.கே. நகர்,**
**சென்னை-600 106.**

# பதிப்புரை

இந்நூலில் ஐம்பது சின்னஞ்சிறு சீனக்கதைகள் இடம் பெற்றுள்ளன. எழுத்துலகில் தனக்கென ஒரு உத்தியைக் கையாண்டு பேர் பெற்ற எழுத்தாளர் *திருவைகாவூர்* **கோ. பிச்சை** அவர்கள் 50 சீனக்கதைகளைத் தமிழாக்கம் செய்துள்ளார்கள். ஐம்பது கதைகளும் படித்துச் சுவைக்கத்தக்கவை. சில கதைகள் படிப்பதற்கு வேடிக்கையாக உள்ளன. ஆசிரியரின் எழுத்து நடை சிரிப்பூட்டும் வண்ணம் அமைந்துள்ளது. எந்த வயதினரும் படித்து இன்புறுத்தக்க சிறுகதைகள் இவை.

“தேவை ஒரு புன்னகை'' சிறுகதை கணவனிடம் மனைவி எப்பொழுதும் புன்னகையையே காட்ட வேண்டும் என்று கற்பிக்கிறது. ‘குடை’ என்ற சிறுகதையில் ஒருவர் குடையுடன் வெளியில் செல்வதைக் கண்டு அந்தக் குடியிருப்பிலுள்ள ஒவ்வொருவரும் தேவையில்லாமல் குடையுடன் வெளியில் செல்லும் காட்சி வேடிக்கையானது. விருந்தில் குறுக்கீடு என்ற சிறுகதையில் ஒரு ‘ஈ’ ஏற்படுத்திய பரபரப்பு சிரிப்பூட்டுகிறது. சாலை விளக்குகள் என்ற கதை வேகத்தினால்தான் விபத்து ஏற்படுகிறது என்ற படிப்பினையைத் தருகிறது.

இவ்வாறு இந்நூலில் இடம் பெற்ற ஒவ்வொரு கதையும் உயிரோட்டம் உள்ளவை. சிந்தனையைத் தூண்டும் சின்னஞ்சிறு சீனக்கதைகளை வாசகர்கள் பெரிதும் வரவேற்பார்கள் என்ற எதிர்பார்ப்புடன் **எமது நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம்** இந்நூலை வெளியிடுகிறது.

**-பதிப்பகத்தார்.**

**நேயர்களின் நேயர் இன்று ஒருதகவல் புகழ்**
**தென்கச்சி கோ. சுவாமிநாதன் அவர்களின்**
**அணிந்துரை.**

# அறிவின் வெளிச்சம்

இந்தப் புத்தகத்தில் இடம்பெற்றிருக்கிற
எல்லாமே
அழகான சிறுகதைகள்
அழகான சிறுகதைகள்
இவை அழகாக அமைந்திருப்பதற்குக் காரணம்
இவற்றின் உருவம்.
இவை ஆழமாக அமைந்திருப்பதற்குக் காரணம்
இவற்றின் உள்ளடக்கம்.
மேலோட்டமாகப் பார்க்கிறபோது இவை
வேடிக்கையான கதைகள் போல தோன்றினாலும்,
மீண்டும் ஒருமுறை சிந்திக்கிற போதுதான்
இதன் வீரியம் புரிகிறது.
மனிதனுக்குள்ளே புதைந்து கிடக்கிற
மூடத்தனங்களையும், கோமாளித்தனங்களையும்
மிக இயல்பாகச் சுட்டிக்காட்டுகிற கதைகள்
இவை.
இவை எல்லாவற்றையும் விட முக்கியமானது
இதன் மொழிபெயர்ப்பு.
மூலமே இதுதானோ என்று மயங்கவைக்கிற
மொழிபெயர்ப்பு
அதை அற்புதமாகச் செய்திருக்கிறார்

மதிப்பிற்குரிய **திருவைகாவூர்.கோ. பிச்சை** அவர்கள்.
நான் சின்ன வயதிலிருந்தே அவர்களுடைய
மொழியாக்கங்களை தாமரை, செம்மலர்
உள்ளிட்ட பல்வேறு தமிழ் இதழ்களில்
படித்து வருகிறவன்.
ஏராளமாகச் செய்திருக்கிறார்.
அந்த மொழிபெயர்ப்பு அனுபவம் இதிலே
முத்திரை பதித்திருக்கிறது.
வயது வேறுபாடின்றி எல்லாருமே இதைப்
படிக்க முடியும்.
மனித மனத்தின் இருட்டான பகுதிகளில் எல்லாம்
வெளிச்சக் கீற்றுக்களை விழவைக்கிற
கதைகள் இவை.
இவற்றைத் தேர்வு செய்து தமிழ் மக்களுக்கு
வழங்குகிற நூலாசிரியர் பாராட்டுக்குரியவர்.
இதுபோன்ற புத்தகங்களை என்.சி.பி.எச். தான்
வெளியிட முடியும்.
வெளியிட்டிருக்கிறது.
அறிவின் வெளிச்சம் எங்கும் பரவ வேண்டும்
என்பது நூலாசிரியரின் ஆசை.
அது நிச்சயம் நிறைவேறும் என்கிற
எண்ணம்
இந்நூலைப் படிக்கிறபோது இதயத்தில்
துளிர்விடுகிறது.
நல்வாழ்த்துக்கள்.




அன்புடன்
**தென்கச்சி கோ. சுவாமிநாதன்.**

சென்னை-4
21-5-2000

# உள்ளுறை

# 1 தேவை ஒரு புன்னகை

அவர்கள் திருமணம் செய்து கொண்டு ஒரு வருடம்தான் ஆகிறது. ஆனால் அவர்கள் ஒருபோதும் சந்தோஷமாக இருந்ததில்லை. அடிக்கடி சண்டையிட்டுக் கொண்டார்கள். வெகு சீக்கிரத்திலேயே இருவருக்கும் கோபம் வந்துவிடும்.

ஒவ்வொரு நாளும் பள்ளியில் வேலை முடிந்து வீடு திரும்பும்போது அவள் முகம் கடுகடுவென்றிருக்கும். ''நீ இல்லாமலேயே என்னால் வாழமுடியும்'' என்று சொல்வது போல அவள் முகம் இருக்கும். ''உன்னைவிடச் சிறந்த பெண்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்'' என்று சொல்வது போல அவள் கணவன் அலட்சிய பாவத்தோடு முகத்தை உம் என்று வைத்துக் கொண்டிருப்பபான்.

ஒரு ஆரம்பப் பாடசாலையில் அவள் முதல் வகுப்பு ஆசிரியையாக இருந்தாள். முதல் வகுப்புப் பிள்ளைகளுக்கு அவர்களது ஆசிரியையைவிடப் புனிதமானவர்கள் யாரும் இல்லை. சத்தியம், நல்லொழுக்கம், நற்பண்பு, அழகு இவைகளின் அவதாரம் தான் ஆசிரியை என்பவர். குழந்தைகள் பெற்றோர்களுக்குக் கீழ்ப்படியாமல் இருக்கலாம். ஆனால் ஆசிரியைகளின் வார்த்தைகளை அவர்கள் ஒருபோதும் சந்தேகிக்க மாட்டார்கள்.

ஒருநாள் காலையில் ஸியோலு என்ற பையன் தன் ஆசிரியையிடம் வந்தான். ''அம்மா, நேற்று நான் பள்ளிக்கூடம் விட்டு வீட்டுக்குப் போகும்போது வழியில் யாரோ ஒருவர் என்னைப் பிடித்து நிறுத்தினார்'' என்றான்.

''யாரது?''

''யாரோ ஒரு ஆண்ட்டி.''

''அவளை உனக்குத் தெரியுமா?''

''தெரியாது'' என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினான்.

''ஏன் உன்னை நிறுத்தினாள்?''

ஸியோலு தனது பிரகாசமான பளிங்கு போன்ற கண்களால் விழித்துப் பார்த்தான்:

''நீ ஸியோலு தானே?'' என்று என்னைக் கேட்டாள்.

''ஆமாம் என்றேன். என் தலையைத் தடவிக் கொடுத்துக் கொண்டே என்னை உற்றுப் பார்த்தாள். நான் பயந்து விட்டேன்.''

''அப்புறம்?''

ஆசிரியை அவன் பக்கமாகக் குனிந்து கேட்டாள்.

''என் பாதங்களை அளந்து பார்த்து நான் வளர்ந்ததும் எனது பாதங்கள் பெரிதாகிவிடும் என்றும், அப்போது 42 சைஸ் செருப்புகள்தான் சரியாக இருக்கும் என்றும் சொன்னாள், இன்று மறுபடியும் வருவதாகவும் அப்போது தோலில் செய்த ஒரு ஜோடிச் செருப்பு கொண்டு வந்து எனக்குக் கொடுப்பதாகவும் சொன்னாள்.''

''இதை உன் பெற்றோரிடம் நீ சொன்னாயா?''

இல்லை என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினான்.

''சொல்ல வேண்டாமென்று அந்த ஆன்ட்டி சொன்னாள்.''

இந்தக் கதையைக் கேட்ட ஆசிரியை ஆத்திரப்பட்டாள். பிறகு புன்னகை செய்தபடி, ''பள்ளிக்கூடம் விட்டதும் நானும் உன்னுடன் வருகிறேன். ஆனால் நான் உன் பின்னால் வந்து

கொண்டிருப்பேன். நீ என்னைத் திரும்பிப் பார்க்கவே கூடாது. என்ன நான் சொல்வது புரிகிறதா?'' என்றாள்.

சம்மதத்தைத் தெரிவிக்கத் தலையை ஆட்டினான். வகுப்பு அறையை விட்டு ஸியோலு வெளியே வந்தான். பள்ளி மணி 'அடித்ததும், பட்டியிலிருந்து ஆட்டுக்குட்டிகள் துள்ளி ஓடிவருவதுபோல் குழந்தைகள் குதித்துக்கொண்டு வெளியே ஓடி வந்தார்கள். ஆசிரியை ஸியோலுவைப் பின் தொடர்ந்தாள். அவர்கள் கொஞ்சதூரம் தான் சென்றிருப்பார்கள். ஒரு பெண் ஸியோலுவை நெருங்குவதை ஆசிரியை பார்த்துவிட்டாள். அவன் சொல்லியது போலவே அந்தப் பெண் அவனது தலையைத் தடவிக் கொடுத்துக் குனிந்து தனது முகத்தோடு அவனது முகத்தைச் சேர்த்துக் கொண்டாள்.

இறுதியாக அவனிடம் ஒரு அட்டைப் பெட்டியைக் கொடுத்தாள். அதைப் பெற்றுக்கொள்ள ஸியோலு மறுத்து அப்பால் விலகியபோது ஆசிரியை அந்த இடத்துக்கு வந்துவிட்டாள்.

''இந்த ஆண்ட்டி தான் நான் சொன்னது'' என்றான் ஸியோலு.

நாணம் அடைந்து அந்த இளம் பெண் அவ்விடத்தைவிட்டு விலகத் திரும்பியபோது, ''ஸியோலுவை உனக்கு எப்படித் தெரியும்?'' என்று ஆசிரியை கேட்டாள்.

அந்தப் பெண் தன் கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டாள். முகம் வாடிப் போயிற்று. ஸியோலுவைப் பார்த்து மௌனமாக நின்றாள். ஒரு கணம் சென்றதும் ஆசிரியையின் கரங்களைப் பற்றித் தன் பக்கமாக இழுத்துக் கொண்டாள்.

கண்களில் நீர்தளும்ப ஆசிரியையைப் பார்த்தாள்.

அவளது கண்களும் ஸியோலுவினுடையதைப் போன்றே கருமையாக இருந்ததை ஆசிரியை கவனித்தாள்.

''நான்தான் ஸியோலுவைப் பெற்றெடுத்த தாய் என்று கன்னங்கள் வழியே கண்ணீர் வழிந்தோட அவள் சொன்னாள்.

''ஆனால் அவனுக்கு உன்னைத் தெரியவில்லையே!'' என்று விவரம் புரியாமல் ஆசிரியை கேட்டாள்.

இதைக் கேட்ட அந்தப் பெண் வாயைப் பொத்திக்கொண்டு மெல்ல விசும்பினாள்.

''ஸியோலுவுக்கு ஒரு வயதான போது அவன் தந்தையை விவாகரத்து செய்து நான் பிரிந்துவிட்டேன். நான் நிரந்தரமாக என் பையனைப் பறிகொடுத்துவிட்டேன். அவன் இவ்வளவு உயரமாக வளர்ந்திருப்பான் என்று நான் நினைக்கவில்லை.''

இந்தச் செய்தியால் அதிர்ச்சி அடைந்த ஆசிரியை தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டாள்.

''நீ ஏன் விவாகரத்து செய்து கொண்டாய்?''

அந்தப் பெண் தனது சென்ற காலத்தியத் தவறுகளை எல்லாம் உதறித் தள்ளுவதுபோல மிகுந்த துயரத்துடன் தலையைப் பலமாக ஆட்டினாள்.

''எங்களிடையே நிலவிய உறவு ஒன்றும் விவாகரத்து செய்து கொண்டு பிரிந்துவிடும் அளவுக்கு மோசமாக இருந்ததில்லை. ஆனால் நாங்கள் இருவருமே முன்கோபக்காரர்களாக இருந்ததுதான் காரணம். அற்ப விஷயங்களுக்கெல்லாம் கூட எங்கள் இருவரில் எவரும் தணிந்து போவதில்லை.''

அந்தப் பெண் பெருமூச்சுவிட்டாள். ''நான் இன்னும் சற்றுப் பொறுமையாக நடந்து கொண்டிருக்க வேண்டும் என்பதை இப்போது உணர்கிறேன்...''

ஆறாத் துயரம் மேலிட்டதால் அவளால் எதுவும் பேசமுடியவில்லை. ஆசிரியையிடம் அந்த அட்டைப் பெட்டியைக் கொடுத்து, ''இந்தச் செருப்புகள் ஸியோலுவுக்குத்தான். எனக்காக இவைகளை அவனிடம் கொடுங்கள். ஒரு தாயின் மன உணர்ச்சிகளை நிச்சயம் நீங்கள் புரிந்து கொள்வீர்கள் என நம்புகிறேன்'' என்று சொன்னாள்.

அட்டைப் பெட்டியை ஆசிரியை எடுத்துக் கொண்டபோது அந்தப் பெண் ஆசிரியையின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். ''தயவு செய்து இவைகளை எல்லாம் ஸியோலுவிடம் சொல்ல வேண்டாம். எல்லாம் என் தவறுதான் குழந்தையின் மனசைப் புண்படுத்த நான் விரும்பவில்லை....''

இதைச் சொல்லியபடி கண்ணீரைத் துடைத்துக் கொண்டே அந்த இடத்தை விட்டு அகன்றாள். சில அடிகள் சென்றதும் திரும்பி வந்து ஆசிரியையிடம் சொன்னாள்.

''உங்களால் இயன்ற அளவு ஸியோலுவின் படிப்பில் விசேஷ கவனம் எடுத்துக் கொண்டீர்களானால் நான் மிக்க நன்றியுடைவளாக இருப்பேன்.''

இதைச் சொல்லிவிட்டு அந்தப் பெண் திரும்பி வேகமாக நடந்து சென்றுவிட்டாள். அகன்று கொண்டிருக்கும் அந்தப் பெண்ணின் உருவத்தைப் பார்த்தபடியே கையில் பெட்டியுடன் ஆசிரியை வாயடைத்து நின்றாள். அவளது கண்களிலிருந்து நீர் வழிந்து சொட்டியது.

ஆசிரியையின் இதயம் எங்கெல்லாமோ தாவித் தாவிச் சென்றது. தனக்குள் எண்ணமிட்டுக் கொண்டாள். வாழ்க்கையோடு விளையாடுவதை நான் நிறுத்திக் கொள்ள வேண்டும். இல்லை என்றால் அது என்னையும் கூடப் பழிவாங்கிவிடும். நான் என் கணவரிடம் இனி சிடுமூஞ்சித்தனமாக நடந்து கொள்ளமாட்டேன். எங்கள் உறவை சுமுகமாக வளர்த்துக் கொள்ளப் பெருமுயற்சி மேற்கொள்வேன். நான் இன்று வீட்டுக்குச் சென்றதுமே என் கணவரைப் பார்த்து முறுவல் செய்வேன். புன்னகை செய்வது அவ்வளவு சிரமமா என்ன? உனது அகத்தில் புன்முறுவல் பூத்தால் உனது முகம் அதைப் பிரதிபலிக்காமல் இருக்க முடியாது.

* * *

# 2 கொட்டும் மழையில்

புறநகர்ப் பகுதிக்கு ஏதோ காரியமாகச் சென்றுவிட்டுத் திரும்பி வரும்போது யாங் மழையில் மாட்டிக் கொண்டான். ஒண்டிக் கொள்ள இடம் தேடுவதில் எவ்விதப் பயனும் இல்லை என்று எண்ணிக் கொண்டு மழையில் நனைந்தவாறே வீட்டை நோக்கி சைக்கிளை வேகமாக மிதித்தான்.

முச்சந்தியில் இவன் பக்கமாக ஒரு லாரி வேகமாய்த் திரும்பிய போது விபத்தைத் தவிர்ப்பதற்காகச் சாலை ஓரம் ஒதுங்கியபோது சைக்கிளில் இருந்து தவறி நடைபாதையில் விழுந்தான். மழையில் கீழே விழுந்த வேகத்தில் சைக்கிளின் முன் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது.

எதிர்பாராத விதமாய்க் கையில் குடையுடன் வந்த ஒரு பெண் அவன் எழுந்திருக்க உதவினாள்.

''பலமாகக் காயம்பட்டுவிட்டதா?'' என்றாள். இல்லை என்று சொன்ன போதிலும் அவன் நிற்க முயன்றபோது அவனது கனத்தைத் தாங்க முடியாமல் அவனுடைய வலதுகால் தடுமாறியது.

''சிரமப்படாதீர்கள்'' என்று சொல்லியபடியே அந்தப் பெண் சற்றுப் பிரயாசையுடன் அவன் கைகளைப் பிடித்துத் தூக்கி அவனை நிற்க வைத்தாள்.

காலைத் தாங்கியவாறு அடி எடுத்து வைத்து சைக்கிளை எடுக்க முயன்றான். என்ன துர்ப்பாக்கியம்! முடியவில்லை.

''வீட்டுக்குச் செல்ல உங்களுக்கு நான் உதவி செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு அவனிடம் தன் குடையைக் கொடுத்தாள். கொட்டும் மழையில் நனைந்து போன அவளைப் பார்க்க யாங் தயங்கினான். ஆனால் அந்தப் பெண் ஒருகையால் அவனைப் பிடித்துக் கொண்டு மற்றொரு கையால் அவனது சைக்கிளைப்

பிடித்துக் கொண்டாள். இருவரும் அவளது குடையில் ஒண்டிக் கொண்டார்.

''அந்தக் காலை ஊன்றி வைக்க முடியுமா என்று பாருங்கள்'' வலியோடு சில அடிகள் எடுத்து வைத்தான். அவளது உதவியின்றி நடக்க முயன்றான். ஆனால் அவள் அவனது கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். யாங் சங்கடத்துடன் அவளைப் பார்த்தான்.

மழைக்குப் பின் தோற்றமளிக்கும் அழகிய ரோஜா மலர் போன்று அவள் இருந்தாள். வழியில் போகிறவர்கள் எல்லாம் வெறித்துப் பார்க்க இருவரும் மழையில் நடந்தனர். இருவருக்கும் ஒரு குடை போதுமானதாக இருக்கவில்லை. அதனால் ஆளுக்கு ஒரு தோள் நனைந்தும் இருவரும் ஒடுங்கி ஒட்டிக்கொண்டே ஒரே குடையில் சென்றதால் இவர்களது மற்ற தோள்கள் இரண்டும் கதகதப்பாகவும் இருந்தன. யாங் தன் காலில் வலி குறைந்துள்ளதை உணர்ந்தான். ஆனாலும் அவளது பிடியிலிருந்து தன் கையை அவன் விடுவித்துக் கொள்ளவில்லை.

ஒரு வேளை அவன்....நினைத்திருக்கலாம். வீட்டை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். சுற்று வழியாகப் போகத்தான் அவன் விரும்பினான். ஆனால் அவளது முகம் மழைத் தூற்றலாலும் வியர்வையாலும் நனைந்திருந்ததால் அதைத் தவிர்த்தான்.

''வீட்டுக்கு வந்து சேர்ந்துவிட்டோம்'' என்றான். சைக்கிளை நிறுத்தி வைத்துவிட்டு அவன் வீட்டிற்குள் செல்ல உதவினாள். உடனே, ''நான் போய் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு கிளம்பினாள்.

அவளைச் சிறிது நேரம் தன் வீட்டில் தங்க வைக்க விரும்பினான். ஆனால் அவளிடம் கை கொடுத்து அழைத்து வர அவன் வெட்கப்பட்டான்.

''தோழரே, நான் உங்களுக்கு இன்னும் நன்றி தெரிவிக்கக் கூட இல்லையே'' என்று கத்தினான்.

''நன்றியா? எதற்காக? அவசியமில்லை. உங்கள் நிலைமையில் நான் இருந்தாலும் நிச்சயமாக நீங்களும் இதைச் செய்திருப்பீர்கள்'' என்று முகமலர்ச்சியோடு சொன்னாள்.

வாசற்படி தாண்டி அவள் செல்வதைப் பார்த்தான். தற்செயலாக ஏற்படும் இது போன்ற சந்திப்புகளினால் உருவெடுக்கும் காதல் கதைகள் அவனது உள்ளத்தில் ஊற்றெடுத்தன. யாங் யதேச்சையாக இரத்தக் கறைபட்டிருந்த தன் கையைத் தடவிக் கொண்டான்.

''தோழரே, சற்று நில்லுங்கள்!'' எதோ சொன்னாள். ''இன்னும் ஏதாவது உதவி தேவைப்படுகிறதா?'' என்று திரும்பிப் பார்த்தபடி அமைதியாகக் கேட்டாள்.

''இல்லை, உண்மையில் எதுவும் இல்லை. நாம் நண்பர்களாக இருக்கலாமே என்று நினைத்துக் கொண்டேன்'' என்று முகத்தில் அசடு வழிய உளறினான்.

''ஏன்?''

''நீங்கள் என் மீது அன்பு செலுத்தினீர்கள்.'' அவள் சிரித்தாள்.

''எனக்கு நேரமாகிவிட்டது. பள்ளியிலிருந்து என் குழந்தையை வீட்டுக்கு அழைத்து வரவேண்டும்'' என்று சொல்லிவிட்டு அங்கிருந்து திரும்பி விரைவாக நடந்து சென்றாள்.

''....இப்படிப்பட்ட இந்தப் பெண் ஒரு புதிய மனிதனிடம் ''ஏன் இவ்வளவு பிரியத்துடன் நடந்து கொண்டாள்?'' என்று எண்ணி வியப்படைந்தான் யாங்.

வெளியில் தொடர்ந்து மழை கொட்டிக்கொண்டிருந்தது.



# 3 குடை

இலையுதிர் காலத்தின் அந்தத்தில் ஒரு அதிகாலை நேரம். காலை நேரத்தின் பரபரப்பு இரவு நேர அமைதியைத் துரத்தி விட்டது.

வழக்கம் போல் 7 மணி அடித்த சில நிமிடங்களுக் கெல்லாம் மாநில வான ஆராய்ச்சி நிலையத்தின் தலைவர் லியு தனது அல்வலகம் செல்ல வீட்டை விட்டு வெளியே வந்தார் ஆனால் இன்றையதினம் கையில் ஒரு குடையையும் எடுத்துச் சென்றார்.

அடுப்பில் பால் காய்ந்து கொண்டிருந்ததை வாயிற்படியில் நின்றபடியே கவனித்துக் கொண்டிருந்த ஜாங் அத்தை ''அன்பே வயதான நீங்கள் நான் சொல்வதைக் கேளுங்கள். இன்று குடையை எடுத்துச் செல்ல மறந்து விடாதீர்கள்" என்று தனது கணவரைப் பார்த்து உரத்த குரலில் சொன்னார்.

''நேற்று இரவு வானிலை அறிவிப்பில் மழையைப் பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லையே.''

''நேற்று விஷயம் நேற்றோடு சரி நான் சொல்வது இன்றைய நிலவரம் பற்றி தலைவர் லியு குடை எடுத்துச் செல்வதை நீங்கள் கவனிக்கவில்லையா?''

இரைந்து பேசிக்கொண்ட இவர்களது உரையாடல் அந்த குடியிருப்பில் இருந்த அனைவர் காதுகளிலும் விழுந்தது. அவர்களும் இந்தச் செய்தியை வெவ்வேறு முறையில் பரப்பினர். இந்தச் செய்தி பரவும் முன்பாக அலுவலகம் கிளம்பிச் சென்றவர்களும், மற்றவர்கள் குடைகளுடன் வருவதைக் கண்டு பாதி வழியில் திரும்பி வீடு வந்து குடைகளை எடுத்துச் சென்றனர். இதைப் பார்த்த அந்தக் குடியிருப்பில் வசித்த முப்பது குடும்பத்தினரும், டாக்டரிடமோ வேலைக்கோ, பள்ளிக்கோ, அல்லது கடைகளுக்கோ புறப்பட்டவர்கள் அனைவருமே கையில்

குடைகளை எடுத்துச் சென்றனர். இன்னும் பலர் சைக்கிளின் பின்புறத்தில் மழைக்கால சட்டையை வைத்துக் கொண்டு போனார்கள்.

சூரியன் தனது அபூர்வ சக்தியை இழந்தவன் போல காலை நேரப்பனிப்படலத்தை விலக்கப் போராடிக் கொண்டிருந்தான். ஒன்பது மணிக்குப் பிறகு அந்தக் குடியிருப்பின் முன் முற்றம் முழுவதும் சூரிய ஒளியில் குளித்துக் கொண்டிருந்தது. அன்று பகல் முழுவதும் வானம் மேகமூட்டமின்றி பளிச்சிட்டு இருந்தது.

மதியம் எல்லோரும் வீடு திரும்பினர் தலைவர் லியு சரியாக 12 மணிக்கு அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய போது குடியிருப்பிலுள்ள எல்லோரும் கையில் குடையுடன் நுழைவதைக் கண்டு குழம்பியவ்ராய், ''இன்று இளவெய்யில் இதமாகக் காய்ந்து கொண்டிருக்கும் ரம்யமான தினத்தில் எதற்காக எல்லோரும் கையில் குடையுடன் வருகிறீர்கள்'' என்று கேட்டார்.

''இதே கேள்வியைத்தான் நாங்கள் எல்லோரும் உங்களைக் கேட்கப் போகிறோம். இன்று காலையில் நீங்கள் தானே முதலில் குடையை எடுத்துக் கொண்டு கிளம்பினீர்கள்.''

தலைவருக்கு இப்போது தான் விஷயம் புரிந்தது. ''என் குடையை என் பையன் உடைத்து விட்டான். அதைப் பழுது பார்த்துக் கொண்டுவரத்தான் கையோடு எடுத்துக் கொண்டு போனேன்'' என்று சொல்லிச் சிரித்தார்.

அந்தக்குடியிருப்பில் இருந்த அனைவரும் அவருடன் சேர்ந்து சிரித்தார்கள்.



# 4 தெருவின் சந்திப்பிலே

எனது வீட்டிற்குப் பக்கத்திலுள்ள தெருவின் சந்திப்பில் செருப்புக் கடை தோன்றி அதிக நாட்கள் ஆகவில்லை என்றாலும் அது சரியாக எப்பொழுது தொடங்கியது என்று எனக்குத் தெரியாது. செருப்புத் தைக்கும் தொழிலாளி ஒரு இளைஞன். என் வயது இருக்கலாம். அவனுக்குப் பொருத்தமான வேலை கிடைக்கவில்லை என்பதில் சந்தேகமில்லை. ஆகவே தன் வாழ்க்கையை நடத்த அவன் முயற்சி செய்து கொண்டிருக்கிறான். அவனது கண்கள் பெரிதாகவும் பிரகாசமாகவும் இருந்தன. தன்கையிலுள்ள வேலையைக் கவனிப்பதைக் காட்டிலும் வாடிக்கையாளர்கள் வருகிறார்களா என்றுதான் அவனது கண்கள் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டிருந்தன.

செருப்புக் கடைவழியாக நான் போகும் போதெல்லாம் நான் அரசாங்கத் தொழிற்சாலையில் வேலை பார்ப்பதால் அதிர்ஷ்டசாலி சமூகத்தில் மேம்பட்டவன் என்றும் என்னை எண்ணிக் கொள்வேன்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை குப்பைக் கூடையில் உள்ளவைகளை குப்பைத் தொட்டியில் கொட்டுவதற்காக எடுத்துச் சென்றபோது தெரு முனையிலிருந்து யாரோ என்னைக் கூப்பிடுவது காதில் விழுந்தது. ''தோழரே கிழிந்து போன அந்தச் செருப்புக்களைக் குப்பைத் தொட்டியிலா எறியப் போகிறீர்கள்?''

இப்படிக் கேட்டது அந்தத் தொழிலாளிதான். ஆமாம் என்பதற்காக நான் என்தலையை ஆட்டினேன்.

அவன் என்னை நெருங்கி வந்து செருப்பை எடுத்து தனது அழகிய கண்களால் ஆராய்ந்து பார்த்தான். ''இவைகளை ஏன் எறியப் போகிறீர்கள்? அவைகளைப் பழுது பார்த்து சரிசெய்து விடலாமே!'' என்று ஆவலோடு சொன்னான்.

வேலை நேரத்தில் பயன்படுத்திக் கொள்ள தொழிற்சாலையில் எனக்கு வழங்கப்பட்டவை இந்த செருப்புகள். அவைகள் முன்னும் பின்னும் கிழிந்து போய்விட்டன. குதிகால் பகுதியில் அதன் உயரம் தேய்ந்து தகடுபோல் ஆகிவிட்டது. தூக்கி எறியும் அளவிற்கு அதற்கு வயதாகிவிட்டது. இதைப் பழுது பார்க்கலாமென்று அவனால் எப்படி சொல்ல முடிகிறது? இளம் வயதுக்காரனான இவன் எப்படித் தன்தொழிலில் அனுபவம் பெற்றிருக்க முடியும்? அவன் வறுமை நிலையில் இருப்பதால் அவனுக்குப் பணம் தேவைப்படுகிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. அவனுக்காக நான் இரக்கப்பட்டேன். தர்ம சிந்தனையுடன் நான் உனக்கே இவைகளைக் கொடுத்து விடுகிறேன் என்றேன்.

ஆனால் அவன் இதற்குச் சம்மதிக்கவில்லை. அதற்குப் பதிலாக அவன் சொன்னான்: ''நான் இவைகளைப் பழுது பார்த்து உங்களுக்குத் தருகிறேன். மேலும் சிலமாதங்களுக்கு இவைகளை நீங்கள் உபயோகித்துக் கொள்ள முடியும். புதிதாக ஒரு ஜோடி செருப்பு வாங்க உங்களுக்கு 20 யுவான் செலவாகும். பழுதுபார்க்க நீங்கள் எனக்கு ஒரு யுவான் கொடுத்தால் போதும். பழுது பார்த்தபின் அவைகள் புதிதுபோலவே இருக்கும். செய்யலாமா? என்ன யோசிக்கிறீர்கள்?''

அவனது வாதப்படி நான் கூலி கொடுத்து, அவன் பழுதுபார்த்து கொடுக்கும் செருப்பை பெற்றுக் கொள்ள வேண்டும்.

ஆனால் இப்படிப் படுமோசமாக் கிழிந்து போன செருப்புகளைப் பழுது பார்த்து சரிசெய்வதற்குப் போதிய திறமை அவனுக்கிருக்குமென்று நான் நினைக்கவில்லை.

ஹும், அவன் என்னை ஏமாற்றப்பார்க்கிறான் போல் தோன்றுகிறது. அதைவிட அவன் என்னிடம் ஜேப்படி செய்யலாம்! அவைகளைப் பழுது பார்க்க முடியுமென்று நான் நினைக்கவில்லை என்று முடிவாகச் சொல்லி விட்டேன்.

அவன் தனக்குள் ஏதோ முணுமுணுத்தான். பிறகு அவன் ''அப்படியானால் எனது கடையை ஒரு குப்பைத் தொட்டியாக எண்ணி உங்கள் செருப்புகளையும் குப்பையைப் போலத் தூக்கி எறிந்துவிட்டுப் போங்களேன்'' என்று சொன்னான்.

அவன் எவ்வளவு தந்திரசாலி. நான் சொன்னேன் ''சும்மா கொடுக்கிறேன்'' என்று. ஆனால் அவனோ ''எறியுங்கள்'' என்று மாற்றிவிட்டான். இந்த வார்த்தையை அவன் மாற்றியதன் மூலம் தனக்கென்று சொந்தமான ஒரு வேலையை உண்டாக்கிக் கொண்டு விட்டான். அவன் இந்த செருப்புகளை பழுதுபார்த்துவிட்டால் அவைகளை அவன் எனக்குக் கொடுக்கக் கடமைப்பட்டவன் அல்ல. ஏனென்றால் அவை உபயோகமற்றவை என்று என்னால் வீசி எறியப்பட்டவை.

அதே போல் செருப்புகளை நான் அவனுக்கு சும்மா கொடுத்து உதவினேன் என்று அவன் எனக்கு நன்றிக்கடன்பட வேண்டியதுமில்லை. வாழ்க்கையானது வேலையற்ற ஒரு வாலிபனை எந்த அளவுக்கு கபடனாக ஆக்கியுள்ளது என்பதை நினைத்து நான் அதிர்ச்சியடைந்து போனேன்.

சினிமா பார்த்துவிட்டு நான் செருப்புக்கடை வழியாக வீடு திரும்பிக் கொண்டிருந்த போது அவன் மீண்டும், ''தோழரே உங்கள் செருப்புகள் பழுது பார்க்கப்பட்டு தயாராக் உள்ளது'' என்று கூப்பிட்டான்.

செருப்புகளை நான் எறிந்து விட்டதால் அவைகளை நான் எனக்கென்று உரிமையோடு கோர முடியாது. என்றாலும் அவனது தொழில் திறன் எப்படி உள்ளது என்று பார்க்கும் ஆர்வம் தூண்ட செருப்புகளை எடுத்து உற்றுப் பார்த்த போது அவை நான் கொடுத்தவைதான் என்று என்னால் நம்ப முடியவில்லை. எல்லாம் செம்மையாகப் பழுது பார்க்கப்பட்டு குதிகால் பகுதியும் கனமாகவும் உயரமாகவும் செப்பனிடப்பட்டிருந்தது. மேல்புறம் சாயம் பூசப்பட்டு பளபளவென்று இருந்தது. ஆம், அவை புதிது

போன்று நன்றாகவே இருந்தன. அவன் சொல்லியது மிகையல்லதான்.

''உங்களுக்குத் திருப்தியாக இருக்கிறதா?'' என்று புன்னகை செய்தவாறு கேட்டான்.

நான் அவைகளை எறிந்ததை மறந்தவனாக ஆம் எனக்கு பூர்ண திருப்திதான் என்று சொல்லி நானும் லேசாக சிரித்தேன்.

''ஐந்து யுவான்? கொடுங்கள்.'' என்று சொல்லி என்னிடம் கை நீட்டினான்.

ஐந்து யுவானா? எனது இதயம் வீழ்ந்துவிட்டது! நான் அந்த இளைஞன் வைத்த பொறியில் மாட்டிக் கொண்டேன்! இப்படித்தான் முன்பு ஒருதடவை நான் இயற்கைக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்த சமயம் ஒரு வாலிபனால் ஏமாற்றப்பட்டது என் நினைவுக்கு வந்தது. அவன் எனது பேனாவை எடுத்துக் கொண்டு அதில் ஒரு வாக்கியத்தைப் பொறித்துக் கொண்டே அதற்கு 5 ஃபென் (FEN) ஆகும் என்றும் சொன்னான். ஆனால் வேலை முடிந்ததும் ஒவ்வொரு வார்த்தைக்கும் 5 ஃபென் வீதம் கொடுக்க வேண்டும் என்று வம்பு பண்ணி வாங்கிவிட்டான்! இப்போது அதே தந்திரத்தைத்தான் இவனும் கையாள்கிறான் போலும். அந்த சமயம் ஏற்பட்ட அந்த உணர்வு - கோபம், அவமானம், வெறுப்பு - இப்போதும் உண்டாயிற்று.

நான் ஜாடையாக அவனைப் பார்த்தேன். அவனது கண்களில் ஒரு தந்திரப் புன்முறுவல் பூத்திருந்தது. ஆஹா அந்த ஒளிமிக்க இரண்டு கண்களும் அவனது முகத்திற்குப் பொருத்தமாக இல்லை.

முதலில் நீ ஒரு யுவான் கொடுத்தால் போதுமென்று சொல்லவில்லையா? என்று கோபத்துடன் கேட்டேன்.

அவன் சிரித்தான். பேனாவில் எழுத்துக்களைப் பொறித்தவனைப் போல இவனும் ஒவ்வொரு ஒட்டுத் தையலுக்கும் ஒரு யுவான் என்று சொல்வானோ என்று நினைத்தேன். அவன் இன்னும் சிரித்துக் கொண்டே ''நீங்கள்

இவைகளை வீசி எறியப் போவதாகச் சொல்லவில்லையா'' நீங்கள் எறிந்தீர்கள். நான் அவைகளைக் கண்டெடுத்து பழுதுபார்த்து புதிதாக்கியுள்ளேன். நான் இப்போது இவைகளை - எனது பொருளை - விற்பனை செய்கிறேன். இவை ஐந்து யுவான் பெறுமானம் உடையயவை தானோ?'' என்றான்.

நான் அதிர்ச்சி அடைந்து அசட்டு சிரிப்பு சிரித்தேன். ஹூம், சரிதான். அவை 5 யுவான் பெறும் என்றேன். இளநகை செய்தவாறு அவன் சொன்னான்: ''நீங்கள் பாயில் நுழைந்தீர்கள்; நான் கோலத்தில் நுழைந்து கொண்டேன். நாம் ஒரு கல்லில் இரண்டு பறவைகளை வீழ்த்தி விட்டோம். இந்த ஒரு ஜோடி சாதாரண செருப்பையும் நீங்கள் குறைவாக மதிப்பிட்டுவிட வேண்டாம். நமது நாட்டில் ஒவ்வொருவரும் ஒரு ஜோடி செருப்புக்காக செலவிடும் தொகையை மிச்சப்படுத்தினால் அது எவ்வளவு பெருந்தொகையாகக் குவியும் என்பதை சிந்தித்துப் பாருங்கள்.''

ஆமாம், ஆமாம், என்று தலையை ஆட்டியபடியே அவனிடம் ஒரு யுவான் கொடுத்துவிட்டு எனது சைக்கிளில் இருந்த கூடையில் செருப்புகளை வைத்தேன். அவன் கீழே உட்கார்ந்து மீண்டும் தனது வேலையில் ஈடுபட்டான். அவனுக்கு நான் கடமைப்பட்டிருப்பதை உணர்ந்து அங்கேயே சற்று நின்றேன். அவனது கையிலிருந்த செருப்பின் மீது அவனது கண்களின் பார்வை பதிந்திருந்தது. அந்தப் பார்வை மென்மையாகவும் கவனமாகவுமிருந்தது. திடீரென நான் என் பையிலிருந்து 5 யுவான் கரன்ஸி நோட்டு ஒன்றை எடுத்து அவனிடம் கொடுத்தேன்.

அவன் திகைப்படைந்தான். ''நீ...'' ''எனது செருப்புகளைப் பழுது பார்த்து புதிது போல அழகாக செப்பனிட்டுக் கொடுத்தமைக்காக மனமுவந்து இந்தப் பணத்தை உனக்குத் தருகிறேன். நீ வேலை இல்லாமலிருப்பது உனக்கு மிகுந்த வேதனை அளிக்கக் கூடியது.''

அவன் அப்படியே மலைத்து நின்றுவிட்டான். நாங்கள் நின்ற இடம் தெருவின் சந்திப்பாக இல்லாமல் இருந்திருந்தால் அவனை நான் நெஞ்சாரக் கட்டித் தழுவி ''எனது அன்பு சகோதரா!'' என்று பாராட்டி மகிழ்ந்திருப்பேன்.

卐

# 5 ஒரு பிறந்தநாள் கேக்கின் பயணம்

1

திரு. பீ என்பவரின் 50வது பிறந்தநாள் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ள திரு.ஏ என்பவர் கிளம்பினார். வழியில் ஒரு ரொட்டிக்கடையில் இறங்கி விசேஷமாக தயாரிக்கப்பட்டிருந்த கேக் ஒன்றை வாங்கினார். அதன்மேல் பக்கத்தில் 'நீடூழி வாழ்க' என்று வெண்ணெயினால் அழகான எழுத்துக்களைத் தன் கையாலேயே பதித்து வைத்தார். அதை அப்படியும் இப்படியும் சுற்றிச் சுற்றிப்பார்த்து திருப்தி அடைந்தவராய், ''நண்பரே நீர் இதைப் பார்த்த மாத்திரத்தில் ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவீர்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டார்.

2

திருமதி. பீ சொன்னர்: ''நாம் இந்தக் கேக்கை சாப்பிட்டு விடக்கூடாது. நமது பையன் ஜியோவோமிங் -கின் ஆசிரியர் திரு சீ அவர்களுக்குக் கொடுத்துவிடலாம்.''

அவர்களது பையன் சில மாதங்களில் பட்டம் பெற்றுவிடுவான். அந்தப் பள்ளியில் அவனுக்கு வேலை கிடைக்க இந்தப் பிறந்தநாள் கேக்கை திரு.சீ. அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிட திருமதி.பீயும் திரு.பீயும் முடிவு செய்தனர்.

3

ஆசிரியர் திரு.சீ. அவர்களின் மகள் மிகவும் அழகானவள். அவளுக்கு சீக்கிரத்தில் திருமணம் நடைபெற இருக்கிறது. தற்போதைக்கு அவள் தனது தகப்பனாரின் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறாள். எழுத்துக்களை கலை அம்சத்தோடு எப்படி எழுத வேண்டும் என்பதை அவள் பயின்றிருந்ததால் அந்த கேக்கின் மீது 'நீடூழி வாழ்க' என்று வெண்ணெயினால் எழுதப்பட்டிருந்ததைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சி அடைந்தாள்.

திடீரெனச் சிரித்தாள். தனது வருங்கால மாமனார் திரு.டீ அவர்களின் நல்லெண்ணத்தை சம்பாதிக்க இந்த அழகான கேக்கை அவருக்கு அளிப்பது உதவிகரமாக இருக்குமென்று முடிவு செய்து கொண்டாள்.

4

திரு டீ அவர்கள், வெண்ணெயினால் ஆன இந்த எழுத்துக்கள் கேக்கில் பொருத்தப்பட்டுள்ளது, எவ்வளவு அழகாக உள்ளது என்று வியந்து கொண்டார். ''இந்த கேக் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. ஐயோ நான் சர்க்கரை வியாதிக்காரன் ஆயிற்றே. இதை என்ன செய்யலாம்? யாருக்காவது இதைக் கொடுத்துத் தீரவேண்டியதுதான். திரு ஈ அவர்களுக்கு இதைக் கொடுத்தாலென்ன? நாங்கள் இருவரும் உள்நோயாளிகளாக மருத்துவ மனையில் படுத்திருந்தபோது எனக்கு அவர் எவ்வளவோ உதவிகள் செய்திருக்கிறார். மேலும் அவர் இப்போது வசதி உள்ளவராகவும் இல்லை. ஆகவே இதைத் திரு.ஈ அவர்களுக்கே கொடுத்து விடுவோம். அதுதான் நல்லது.''

5

திருமதி. ஈயின் யோசனை: ''புத்தாண்டு பிறக்கப்போகிறது. திரு.ஏ அவர்கள் நமது பையனுக்கு பல புத்தகங்கள் கொண்டு வந்து கொடுத்துள்ளார். எப்போதும் தன்னால் முடிந்தவரை நமக்கு உதவி

செய்வதாகவும் சொல்லி இருக்கிறார். ஆகவே இந்த கேக் திரு.ஏ. அவர்களிடம்தான் போய் சேர வேண்டும்.''

திரு. ஈ (கண்ணீருடன்) ''ஆம். அவர் நம்மீது மிகுந்த பிரியத்துடன் நடந்து கொள்கிறார். நமக்குப் பல உதவிகள் செய்துள்ளார். நாம் நமது நன்றியறிதலைக் காட்டிக் கொள்ள இந்தக் கேக்கை அவருக்குக் கொடுப்பதுதான் முறையாகும்.'' என்றார்.

6

திரு. ஏ. கேக்கை உற்றுப் பார்த்தார். அதில் தன் கைப்பட வெண்ணெயினால், 'நீடூழி வாழ்க', என்று பொருத்தி வைக்கப்பட்ட எழுத்துக்கள் கலைந்திருப்பதைக் கண்டார்.

''என் வாழ்க்கையிலேயே நான் செய்த மகாமுட்டாள்தனமான காரியம் இதுதான்,'' என்று ஆத்திரத்துடன் கத்திக்கொண்டே அந்தக் கேக்கை முள்கத்தியினால் குத்தித் தள்ளினார்.

卐

# 6 செருப்பு ஏற்படுத்திய பரபரப்பு

ஆற்றுக்குச் சென்று மீன்களையும் இரால்களையும் பிடித்து வருவதில் எனக்குக் கொள்ளை ஆசை.

ஒரு ஞாயிற்றுக் கிழமை ஆற்றுக்குச் சென்று கரையில் எனது செருப்புகளைக் கழற்றி வைத்துவிட்டு மீன் பிடிப்பதில் உற்சாகத்தோடு ஈடுபட்டேன். அதிர்ஷ்ட தேவதை என் பக்கம் இருந்தது. சிலமணி நேரத்தில் நிறைய மீன்களுடன் நான் கரைக்கு வந்தேன். என்ன ஆச்சரியம்! எனது செருப்பு கிடந்த இடத்தில் ஒரு பெரிய கூட்டம் திரண்டிருந்தது. ஏதோ நடந்திருக்க வேண்டும். மிகுந்த ஆர்வத்தோடு வேகமாக நடந்தேன்.

''பாவம் அந்த மனிதன் பரிதாபத் திற்குரிய அவனுக்கு முப்பது வயதாவது இருக்கலாம்'' என்று ஒரு குரல் சொல்லிக் கொண்டிருந்தது. ''ஒருத்தியைக் கண்டுபிடித்து அவளை மனைவியாக்கிக் கொள்ள அவளது பெற்றோருக்கு அவன் ஒரு ஆயிரம் யுவானுக்கு மேலாகவே செலவிட்டிருப்பான். இங்கே பாருங்கள். பாவம், அவன் தானாகவே ஆற்றில் விழுந்து இறந்திருக்கிறான்.''

''இல்லை நீ சொல்வது உண்மையாக இருக்காது. யாரோ ஒரு பெண்தான் ஆற்றில் விழுந்து தன் உயிரை மாய்த்துக் கொண்டிருக்கிறாள். அவள் தனது காதலனால் கைவிடப்பட்டிருப்பாள். ஏனென்றால் அவன் தொழிற்சாலையில் தினக்கூலியில் வேலை செய்பவனாக இருந்திருக்கக்கூடும். இதனால் மனமுடைந்து அந்தப் பெண் ஆற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டிருக்கலாம்,'' என்றது மற்றொரு குரல்.

கூட்டம் இப்படி ஒரு சோக நிகழ்ச்சியைப் பற்றிப் பலவாறாகப் பேசிக் கொண்டிருந்தது.

ஒரு கிழவியின் கண்டுபிடிப்பு இது. ''ஹுவாங் நிகாங் காணாமல் போனதை நீங்கள் கேள்விப்படவில்லையா? அவள் தனது மருமகளால் மோதி மொத்தப்பட்டு கொடுமைக்கு ஆளானாள். இதைப் பொறுக்க மாட்டாமையால் அவள் நேற்று இரவு வீட்டை விட்டு வெளியேறிவிட்டாள். வாழ்நாள் பூராவும் கடுமையாக உழைத்த அவளுக்கு கடைசியாகக் கிடைத்த புகலிடம் இந்த ஆறுதான் என்று யார்தான் நினைத்திருப்பார்கள். பாவம் அவளுடைய செருப்புதான் இவை.

கூட்டத்தின் நடுவில் நான் நுழைந்தபோது எனக்கு ஒரே குழப்பம். அங்கு எந்த பிரேதமும் கிடப்பதற்கான அறிகுறிகள் எதுவுமில்லை. இரைந்து கொண்டிருக்கும் என் வயிறு தனக்குப் பசி ஏற்பட்டுவிட்டதை எனக்கு உணர்த்தியது. செருப்பைக் காலில் மாட்டிக் கொண்டு நான் கிளம்பினேன்.

என்ன அதிசயம்! உடனே கூட்டம் கலைந்து சென்றது. ஜனங்கள் தங்கள் பண்ணை வேலைகளைக் கவனிக்கக் கிளம்பிவிட்டனர். வேறு சிலர் தாங்கள் செல்ல வேண்டிய இடத்துக்குக் கிளம்பினர். எல்லோரும் முணுமுணுத்தனர். ''ஆக இதுதான் உண்மையான கதை'' என்று சிலபேர் நிந்திப்பது போல என்மீது பார்வையைச் செலுத்தினர். சிரிப்பதா அழுவதா என்று எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

நான் எனது செருப்புகளோடு மட்டுமல்ல அவை பற்றிய கட்டுக்கதைகளின் ஆதாரங்களோடும் போய்க் கொண்டிருக்கிறேன்.



## 7 அதிகாரியின் உடல் நிலை

உடல் பருமனான தலைமை அதிகாரி சமீபத்தில் மது அருந்துவதையும், புகைப்பிடிப்பதையும் நிறுத்தி தனது தேக ஆரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்ள ஆரம்பித்தார். விசேஷ காரணங்களுக்காக தினசரி செய்தித் தாள்களை படிப்பதை மட்டும் விடாமல் வைத்துக் கொண்டார். தனது உடல் நலத்தை அபிவிருத்தி செய்து கொள்வதற்கான முறைகளைத் தெரிந்து கொள்வதற்காகவே செய்தித் தாள்களைப் படிப்பதாகவும் சொல்லிக் கொண்டார்.

அவரது அலுவலகம் பல பத்திரிகைகளுக்கு சந்தா செலுத்தி இருந்தது. ஒவ்வொரு நாள் காலையிலும் அலுவலகம் வந்தவுடன் முதல் வேலையாக ஒரு கோப்பை தேநீர் அருந்தியதும் பத்திரிகைகள் படிப்பதில் மூழ்கிவிடுவார். ஒவ்வொரு கட்டுரையாகப் படித்து அவை அவரது உடல் நிலை பற்றி என்ன சொல்கிறது என்று தெரிந்து கொள்வார். தனது வயதோடு

ஒத்தவர்களுக்கு வரும் வியாதிகள் பற்றி படிக்கும் போதெல்லாம் குறிப்பாக அதில் அதிக கவனம் எடுத்துக் கொள்வார்.

''அதிக நேரம் உட்கார்ந்தே வேலை செய்கிறவர்களுடைய மலக்குடலின் நரம்பு மண்டலம் வீங்குவதால் அவர்களுக்கு மூலநோய் ஏற்பட்டு கடுமையான வலி உண்டாகி அமைதியின்மையால் அவதிப்படுவார்கள் என்பதாக ஒரு கட்டுரையில் படித்தார்.

செய்தித் தாளை கீழே வைத்த அதிகாரி திடீரென பரபரப்படைந்து கவலைக்குள்ளானார். நாள் முழுவதும் தான் உட்கார்ந்தே இருப்பதால் தனக்கு இந்த வியாதி இருக்குமோ என்ற சந்தேகம் தொற்றிக் கொண்டது. மருத்துவமனைக்குச் சென்று வைத்தியப் பரிசோதனை செய்து கொள்ள விரும்பினார். ஆனால் வெட்கப்பட்டுப் போகாமலே இருந்துவிட்டார். அவரது முகத்தில் பயமும், விசனமும் அப்பிக் கொண்டது.

மற்றொரு செய்தித் தாளில் பிரசுரமான ஒரு கட்டுரை. ''உடலில் ஏற்படும் கட்டிகளை அறுவை சிகிச்சை மூலம் தான் அகற்றியாக வேண்டும்'' என்று குறிப்பிட்டது. கட்டுரையைப் படித்து முடிந்ததும் அவரது முதுகில் தினவு எடுப்பதாக உணர்ந்து சொறிந்து கொண்டபோது விரல்களில் ஏதோ கடினமாகத் தென்பட்டது. அது கட்டியாகத்தான் இருக்குமென்று விசார மடைந்தார். கட்டியை அகற்றும்போது உண்டாகும் வலியை நினைத்து, அதைத் தொடாமல் விட்டுவிடலாம் என்று முடிவு செய்து கொண்டார். அதனால் அவரது முகம் சஞ்சலத்தால் வாடிப் போயிற்று.

சில நாட்கள் சென்றதும் நத்தை ஜுரம் பற்றி ஒரு கட்டுரை வெளிவந்தது. அதில், ''அமைதியின்மை பசியின்மை, கால்களில் பலவீனம் இவைதான் நத்தை ஜுரம் பற்றுவதற்கு முன் அறிகுறிகள் என்றிருந்தன. ஜுரம் மேலும் கடுமையாகும் போது நோயாளியின் அடிவயிறு முன்னுக்குத் தள்ளி வந்து, உயிருக்கு ஆபத்தை விளைவிக்கும்'' என்றிருந்தது.

இக்கட்டுரையைப் படித்து முடிப்பதற்கு முன்னரே அவரது நிலைமை கட்டுரையில் விளக்கி இருப்பதைப் போன்றதுதான் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். பத்து வருஷங்களுக்கு முன்பு நடவு வேலையில் விவசாயிகளுக்கு உதவி செய்யக் கிராமப்புறங்களுக்குச் சென்றிருந்த போது அங்குத் தனது இரத்தத்தில் நுண் கிருமிகள் நுழைந்துவிட்டதாக உறுதியாக நம்பினார். குனிந்து தன்னைப் பார்த்துக் கொண்டபோது தனக்கு நத்தை ஜுரம் பீடித்து கடுமையாகி விட்டதன் அறிகுறியாக அவரது பானை வயிறு முன் தள்ளி இருப்பதாகக் கருதி அச்சம் கொண்டார். இப்படியே மனதை அலைபாயவிட்டால் நிலைமை மேலும் மோசமாகிவிடும் என்று மனம் கலங்கினார். டாக்டரிடம் செல்வதை இனியும் தாமதிக்கக் கூடாது என்ற தீர்மானத்துக்கு வந்தார். அலுவலகக் கார் பழுதாகி இருந்ததால் டாக்டரிடம் செல்வது தாமதப்பட்டது. வரிசையாக வரும் தொந்தரவுகளால் கழிந்து போகும் ஒவ்வொரு நாளும் அவரது எடை குறைந்து கொண்டே வந்தது.

இறுதியாகத் தலைமை அதிகாரி மருத்துவமனை சென்றார். பரிசோதனைகள் முடிந்தபின் மருத்துவ அதிகாரி நோயாளியின் மருத்துவக் குறிப்பேட்டில் பின்வருமாறு எழுதி இருந்தார்.

''வியாதி ஒன்றும் இல்லை. மனப் பிராந்தியினால் உடலில் சோர்வும் தளர்ச்சியும் ஏற்பட்டுள்ளது. மனதை லேசாக வைத்துக் கொள்ளவும். வியர்வை உண்டாகும்வரை தேகாப்பியாசம் செய்யவும்.''



# 8 கண்கள்

அவளது கண்களில் ஏற்பட்ட கடுமையான பாதிப்பினால் ஐந்து வயதிலேயே பார்வை இழந்து குருடாகிவிட்டாள். வளர்ந்து பெரியவளானதும் திருமணம் நடந்துவிட்டது.

நற்குண சீலனான அவளது கணவன் வீட்டு வேலைகள் அனைத்தையும் தானே செய்து அவளையும் நன்கு கவனித்துக் கொண்டான். அவள் காலப் போக்கில் ஆரோக்கியமான ஒரு ஆண் குழந்தையையும் பெற்றெடுத்தாள்.

இப்போது தன் மனைவியோடு தன்மகனையும் அவனே கவனித்துக் கொண்டான். அன்போடு இந்தப் பொறுப்புகளை அவன் பொறுமையுடன் நிறைவேற்றி வந்தான்.

குடும்ப பாரத்தை அவனே தன்னந்தனியனாக சுமந்து வந்ததன் காரணமாக ஒரு காலத்தில் யௌவனத்தோடு அழகாக இருந்த அவனை முதுமை வேகமாக ஆட்கொள்ளத் தொடங்கியது. அந்தக் குருட்டுப் பெண் கணவனின் பிரியமான பணிவிடையாலும் பராமரிப்பினாலும் மனம் நெகிழ்ந்து போனாள்.

ஒருநாள் படுக்கையில் கிடந்தபடியே தனது கணவனின் முகத்தை தடவிக் கொண்டே ''நீங்கள் எவ்வளவு உத்தமமான மனிதர். எனது கண்கள் திறந்து உங்களை கண்டு மகிழ விரும்புகிறேன்! ஒரே ஒரு தடவை உங்களை என் கண்ணாரக் காண்பதற்காக என் உயிரையே கொடுப்பேன்'' என்று சொல்லி அழுதுவிட்டாள்.

கணவனின் உள்ளம் உருகியது. அவளைத் தன் இரு கரங்களாலும் இறுகத் தழுவிக் கொண்டே அவளுக்கு ஆறுதல் கூறினான். ''அழாதே, என்ன செலவு ஆனாலும்சரி நாளைக்கே நான் ஜிங் அல்லது ஷாங்காய் நகரம் சென்று ஒரு சிறந்த வைத்தியரை அழைத்து வந்து வைத்தியம் செய்ய ஏற்பாடு செய்கிறேன். நீ மனங்கலங்காமல் இரு..

கை தேர்ந்த டாக்டர் ஒருவர் வந்தார். உயர்ந்த வைத்தியத்தின் விளைவாக அவளது இரு கண்களும் பார்வை பெற்றன. அவளால் எதையும் பார்க்க முடிந்தது. ஆனால் இந்த புதிய உலகம் தனது மகனையும் கணவனையும் அறிந்துகொள்ள முடியாதவாறு அவளுக்குக் குழப்பத்தை உண்டாக்கியது.

ஆயினும் அவளது கணவன் உணர்ச்சி வசப்பட்டு அவளை நிதானப்படுத்த அவளருகே நெருங்கினான்.

''உங்களுக்கு என்ன வேண்டும்'' என்று கத்தினாள்.

''நான் உனது கணவன்'' என்றான், ''இல்லை, உங்களை எனக்குத் தெரியாது'' என்று சொல்லி உற்று நோக்கினாள்.

அன்று இரவு கண்களை இறுக மூடியபடி தனது கணவனின் தலையைத் தன் கைகளால் பற்றித் தன் விரல்களால் அவனது முகத்தை இதமாகத் தடவிக் கொடுத்துக் கொண்டே, ''நீங்கள் எனது பிரிய கணவர். படுக்கைக்குச் செல்வோம் வாருங்கள்'' என்று அமைதியாகக் கூறி அழைத்தாள்.

அவள் தனது மகனை மார்போடு அணைத்துக் கொண்டாள். கணவன் அவர்கள் இருவரையும் சேர்த்து இறுகத் தழுவிக் கொண்ட போது அவள் மூச்சுத்திணற, நாம் இப்போது பத்திரமாக இருக்கிறோம். உண்மையில் எனது கண்களால் உங்களைக் கண்டுகொள்ள முடியவில்லை என்று அவள் நா தழுதழுக்கக் கூறினாள்.



# 9 விருந்தில் குறுக்கீடு

விருந்தினர் மாளிகையின் பெரிய ஹாலில் கல்வி இலாகாவின் உயர் அதிகாரிகளுக்கு விருந்து உபசரிப்பு வெகு மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. மின் விசிறியின் சுழற்சியினால் நீலவர்ணத்திரைகள் நாட்டியமாடிக் கொண்டிருந்தன. சிரிப்பும் பாராட்டு உரைகளும் ஒலித்துக் கொண்டிருக்க சூழ்நிலை இதமாக இருந்தது.

மூன்று உயர் அதிகாரிகள், இலாகாத் தலைவர், மூன்று உதவி அதிகாரிகள், பிரத்யேகமாகப் பரப்பப்பட்டிருந்த மேஜைகளைச் சுற்றி அமர்ந்திருந்தனர். இந்த விருந்து ஏற்பாடுகளை செய்திருந்த குமாஸ்தா பாவோவும் அவர்களுடன் அமர்ந்திருந்தார்.

விருந்தில் மூன்றாவது அயிட்டம் பரிமாறியதும் பாவோ பரபரப்படைந்து தலைவர் ஹோயுவைப் பார்த்து ''இதை இப்போது அவரிடம் சொல்லலாமா?'' என்று தயங்கினான்.

''அதிகாரிகளின் முன்பாக மனம் போனபடி பேசக்கூடாது'' என்று தலைமை அதிகாரி ஒரு தடவை என்னிடம் சொல்லியுள்ளார். ஆனால் நான் இப்போது பேசாமல் இருந்துவிட்டாலோ.....'' அவனது உதடுகள் துடித்தன. வேறு வழி தெரியாமல் பேசாமல் இருந்துவிட்டான்.

தலைமை அதிகாரி மற்ற அதிகாரிகளுக்கு வாழ்த்துரை கூறிக்கொண்டு இருந்தபடியால், பாவோவின் முகம் வெளிப்படுத்திய விசித்திர பாவத்தை கவனிக்கவில்லை.

இறுதியாக பாவோ துணிந்து வாயைத் திறந்தான். ''நான்....நான் - ஒரு விஷயம்...தெரிவிக்க - விரும்புகிறேன்....''

பேசாமலிரு. இலாகா வேலைகள் பற்றியதாக இருந்தால் விருந்து முடிந்த பிறகு பேசிக்கொள்ளலாம். தயவு செய்து இப்போது பேசாமலிரு என்று கோபத்தோடு சொல்லிவிட்டு

மற்றவர்களைப் பார்த்து ''உணவு அருந்துங்கள்'' என்று சொன்னார்.

பாவோ, தலைமை அதிகாரி உணவை எடுத்த ஸ்பூனைப் பார்த்து, ''அதிகாரி அவர்களே'' என்று கத்தினான்.

''சொல்வதற்கு என்ன அவ்வளவு முக்கியமான விஷயம்? விருந்து முடியும்வரை வாயை மூடிக்கொண்டிருக்க வேண்டு மென்று சொல்லவில்லையா?'' என்று கத்தினார், தலைமை அதிகாரி.

பாவோ மௌனமானான். விருந்து முடிந்தது. விருந்தினர்கள் வெளியே சென்றதும் தலைமை அதிகாரி பாவோ பக்கமாகத் திரும்பி ''என்ன சொல்ல வேண்டுமென்று துடித்தாய். அதை இப்போது சொல்லேன்'' என்றார் பொறுமையாக.

''விருந்தில் மூன்றாவது அயிட்டம் பரிமாறிய போது உங்கள் தட்டில் ஈ கிடந்தது. உணவை ஸ்பூனால் எடுக்கும்போது அதுவும் சேர்ந்து வந்துவிட்டது. அதையும் அப்படியே சாப்பிட்டு விட்டீர்கள். இதைத்தான் நான் சொல்லத் துடித்தேன்'' என்று பாவோ பணிவாகச் சொன்னான்.



# 10 கப்பலின் மேல் தளத்திலே

கடல் அமைதியாக இருந்தது. நீர் பரப்பின்மீது கப்பல் மிதந்து சென்று கொண்டிருந்தது. கப்பலின் மேல் தளத்தில் பிரயாணிகள் அங்குமிங்குமாக உலாவிக் கொண்டிருந்தனர். அழகாக உடையணிந்து எடுப்பான தோரணையில் இருந்த நடுத்தர வயது மனிதர் ஒருவர் மேல்தளத்தின் ஓரத்தில் வேலியாக அமைக்கப்பட்டிருந்த தண்டவாளத்தின் மீது சாய்ந்தவாறு கடற்கரையை ஒட்டிய நிலப்பரப்பைப் பார்த்தவாறே இருந்தார். ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டார். அவர் கட்டி இருந்த தங்கக் கைக்கடிகாரமும் விரலில் அணிந்திருந்த வைர மோதிரமும் மாலை சூரியனின் ஒளிபட்டு சுடர்வீசி மின்னியது. அவர்

தனியாகத்தானிருந்தார். பக்கத்தில் நின்றிருந்த ஒரு அழகிய இளம்பெண் இவரது செல்வ நிலை, சமய சந்தர்ப்பம் இவைகளை யூகித்து ஊர்ஜிதப்படுத்திக் கொண்டாள். பலமாக வீசிய மாலைக் காற்று மிகவும் குளிராக இருந்தது. ஆகவே அந்த மனிதர் அவ்விடத்தை விட்டு இரண்டாம் வகுப்பிலிருந்த தனது அறைக்குச் சென்றார். படுக்கையில் படுத்தபடியே ஒரு சஞ்சிகையைப் புரட்டிக் கொண்டிருந்தபோது சந்தடி இன்றி கதவைத் திறந்துகொண்டு அந்தப் பெண் உள்ளே வந்தாள். இதற்கு முன்னர் இதுபோன்ற எதிர்பாராத சந்திப்புகளை இவர் சமாளித்திருக்கிறார். சோர்ந்து போயிருந்த அவரது கண்கள் பத்திரிகையை அப்பால் வைத்துவிட்டு, அந்த இளம் பெண்ணை உட்காருமாறு சைகை காட்டியது. அவரது நடவடிக்கையில் எவ்விதப் பரபரப்பும் தென்படவில்லை.

யாருமே பேசவில்லை. பேசாமல் அங்குச் சுகமாக உட்கார்ந்திருப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. அவள் மிக அமைதியாகத் தனது ஆடையிலிருந்த பித்தான்களை நகர்த்தினாள். தனது முடியை கலைத்துக் கொண்டாள்.

''நீங்கள் இப்போது என்னுடன் உங்கள் படுக்கையைப் பகிர்ந்து கொள்ளலாம். நீங்கள் செல்வாக்குள்ள அறிஞர் என்றும் மற்ற எதையும்விட உங்கள் கௌரவத்தையே மேலாக மதிப்பவரென்றும் எனக்குத் தெரியும். உங்களது ஞாபகார்த்தமாக உங்கள் கைக் கடிகாரத்தையும் மோதிரத்தையும் எனக்குப் பரிசாக அளித்துவிட்டால் போலீசுக்குத் தெரிவிக்காமல் நான் பேசாமலிருந்து விடுவேன்,'' என்றாள்.

இதையே மீண்டும் சொல்லியபடி தன் ஆடையின் பித்தான்களைத் திருகிக் கொண்டிருந்த அப்பெண்ணை அவர் ஜாடையாகப் பார்த்தார். அவர் பேச நினைத்தார். ஆனால் வாயைத்திறக்கவில்லை. ஆச்சரியமும் சங்கடமும் வெளிப்பட அந்த மனிதர் தனது காதுகளையும் வாயையும் சுட்டிக் காட்டிவிட்டு

படுக்கையிலிருந்து எழுந்து ஒரு பேனாவை எடுத்து ஒரு காகிதத்தில் இரண்டு வரிகள் கிறுக்கினார்.

''என்மீது நீ தீராக் காதல் கொண்டுவிட்டேன் என்கிறாய். அப்படித்தானே! நான் தனிமையிலிருப்பதை எண்ணி எனக்கு ஒரு துணை தேவை என்று நீ புரிந்து கொண்டதற்கு மிக்க நன்றி. நீ சொல்ல விரும்புவதை இதில் எழுதிக்கொடு. எழுத்து மூலமாகவே நாம் பேசிக்கொள்வோம்.''

அந்த இளநங்கை காகிதத்தையும் பேனாவையும் மற்றும் அந்த மனிதரையும் உற்றுப் பார்த்தாள். சிறிது நேரத் தயக்கத்திற்குப் பின் எழுத ஆரம்பித்தாள்.

அவர் அதைப் படித்துவிட்டு ஜாக்கிரதையாக மடித்து பையில் வைத்துக் கொண்டார்.

''இப்போது என்ன செய்ய வேண்டியுள்ளது? உண்மையாகவே நாம் இப்போது போலீஸை அழைக்க வேண்டும் போல் தோன்றுகிறது. முன் யோசனையற்ற உனது கடிதம் உன் கைக்குக் கிடைக்க வேண்டுமென்றால் உனது கழுத்திலுள்ள முத்து மாலையை இந்த நாகரிக கனவானுக்கு நீ பரிசாகக் கொடுக்க வேண்டும்.'' என்று அந்த மனிதர் ஒவ்வொரு வார்த்தையையும் தெளிவாக உச்சரித்தார்.

''இது மஹா அயோக்கியத் தனம்! என்னை மிரட்டி எனது நகைகளைப் பறிக்கப் பார்க்கிறீர்'' என்று இக்கட்டில் மாட்டிக் கொண்டதை உணர்ந்த அப்பெண் பரபரப்படைந்து கத்தினாள்.

சாவதானமாக படுக்கையில் படுத்துக் கொண்டே அந்த மனிதர், ''பெண்ணே, அமைதிகொள்வாயாக, உனது கேவலமான தந்திரத்திற்காக நீ எனக்கு ஈடு கட்டியாக வேண்டும். நீ அதிர்ஷ்டக்காரி. நீ குறி வைத்த ஆள் உனக்குப் பாடம் போதிக்கப் போதிய அனுபவம் பெற்றுள்ளவர்'' என்று மிக அமைதியாகப் பேசினார்.



# 11 பரஸ்பர உதவி

எழுத்தாளர் யீ இலக்கிய உலகில் கால் எடுத்து வைத்து பல வருடங்கள் ஆகிவிட்ட போதிலும் இன்னும் போதிய பிரபலமடையவில்லை. பல்வேறு தொடர்புகள் மூலம், புகழ்பெற்ற திறனாய்வாளர், 'ஜியாங்'கை யீ சந்தித்து அவரைத் தன் வீட்டிற்கு விருந்துக்கு அழைத்தார்.

விருந்தோம்பலில் மனம் நெகிழ்ந்துபோன ஜியாங், ''உன்னை நியாயமற்ற முறையில் அலட்சியப்படுத்துகிறார்கள். நான் உன்னுடைய இலக்கியப்படைப்புகளைப் புகழ்ந்து பாராட்டி ஒரு சிறந்த விமர்சனம் எழுதி செல்வாக்குள்ள ஒரு சஞ்சிகையின் பிரசுரிக்க ஏற்பாடு செய்கிறேன். அந்தக் கட்டுரையில் உன்னுடைய....''

ஜியாங் தன் பேச்சை முடிப்பதற்குள் யீ தலையைக் குலுக்கிக் கொண்டே குறுக்கிட்டுச் சொன்னார். ''தயவு செய்து கேட்டுக் கொள்கிறேன், நீங்கள் எனது எழுத்துக்களைப் புகழ்ந்து எழுத வேண்டாம். எனது படைப்புகளை குறைகூறி கடுமையாக விமர்சனம் செய்து ஒரு கட்டுரை எழுதி வெளியிடுமாறு தங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இலக்கியத் துறையில் எனது பத்து வருஷ அனுபவத்தில் உங்களால் கடுமையாக விமர்சிக்கப்பட்ட நூல்கள்தான் இங்கு உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் பிரபலமடைந்துள்ளன என்பதைக் கவனித்து வந்துள்ளேன்! இதன் பயனாக உங்களது மதிப்பு மேலும் உயர்ந்து உங்கள் வருமானமும் கணிசமாக உயரும். இதைத்தான் நாம் பரஸ்பர உதவி என்று சொல்கிறோம்!''



# 12 மனக்குறைகள்

எனது நெருங்கிய நண்பரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது.

அன்பார்ந்த மிஸ்டர் வாங்.

நான் இந்த உலகில் வாழ்வது சிரமம்; இயலாத காரியம் என்று நினைக்கிறேன்.

காலை சாப்பாட்டுக்கு ஏதாவது வாங்கிவரலாமென்று எண்ணி ஒரு ஹோட்டலுக்குச் சென்றேன். அந்த ஹோட்டலில் கூடைப்பந்து விளையாடுவதற்குத் தேவையான போர்டு நட்டு வைக்கப்படவில்லை.

செய்திப் பத்திரிகை வாங்கிவரச் சென்றேன். பத்திரிகை விற்பனை செய்யும் பையனின் கண்களின் இமைகளில் ரோமமே இல்லை.

123456789 எண் பஸ்ஸின் வருகைக்காக நான் இரண்டு மணிநேரம் காத்திருந்தேன். ஆனால் அந்த பஸ் வரவே இல்லை.

அலுவலகத்தில் எனது மேஜையில் பெரிய பானை வைத்திருக்கப்படவில்லை.

எனக்கு ஒரு தொலைபேசி அழைப்பு வந்தது. ஆனால் அழைத்தவன் ஒலிம்பிக்கில் உயரம் தாண்டும் போட்டியில் பங்கு கொண்ட பழைய விளையாட்டு வீரனாக இருந்தவனல்ல.

எனது கோப்பையில் தேநீரை ஊற்றிக் கொண்டிருந்தபோது அந்தத் தேயிலைத் தழையைப் பறித்து சேகரித்த பெண் தனது கணவனுக்கு உண்மையானவளாக இருந்திருக்கமாட்டாள் என்பதைத் திடீரென நான் உணர்ந்தேன்.

இதனால் என்னால் காலை உணவு கொள்ள இயலாமல் போயிற்று. செய்தித்தாள் வாங்கிப் படிக்க முடியவில்லை.

அலுவலகத்தில் அமர்ந்து வேலையைக் கவனிக்க முடியாமல் போயிற்று. தேநீர் பருகவில்லை. இந்த உலகில் நான் திருப்தியோடு வாழும்படியாக எதுவுமில்லை. ஆகவே நான் தற்கொலை செய்து கொள்ள விரும்புகிறேன்.

இந்தக் கடிதத்தை உங்களிடம் பட்டுவாடா செய்ய வ்ரும் தபால் சேவகன் குறைந்த பட்சம் ஆறுஅடி உயரம் இல்லாதவனாக இருந்தால் தயவு செய்து இந்தக் கடிதத்தை உடனே எரித்து விடுங்கள்.



# 13 ஒற்றுமைக்காக உழைப்பவர்

வாங்கின் வீட்டுக்குள் ஐடுவான்ஜி அடிமேல் அடிவைத்து மெல்ல நுழைந்து அவனது காதில் கிசுகிசுத்தான். ''இதுபோன்ற மனிதர்களிடம் வாதம் செய்ய வேண்டுமென்று எண்ணாதே. உயர்ந்த மனிதன் என்பவன் பெருந்தன்மையானவன்.''

ஐ சொல்வதைக் கேட்ட வாங் அவனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாது குழம்பியவனாய் மரக்கட்டைகளை இழைத்துக் கொண்டிருந்த வேலையைத் தொடர்ந்தான்.

உன்னைப் பற்றிய வம்புப் பேச்சை இப்போது நீ கேள்வி கேட்டிருக்கக் கூடும். அதைப்பற்றி நீ கவலைப்படாதே. அவன் உன்னைப் போன்று நற்குண நற்செய்கை உடையவனல்ல.''

ஒரு மரக்கட்டையை எடுக்க வாங் கீழே குனிந்தான். ஐவாங்கின் பக்கமாக சாய்ந்து ''உனது மூக்கு ஒட்டி வைக்கப்பட்டுள்ள் ஒன்று என்றும், அது செயற்கை மூக்கு என்றும் சௌ சொல்லித் திரிகிறான். இந்த செய்தி உனக்கு தெரியுமா?'' என்று வாங்கின் காதில் ஓதினான்.

வாங் உள்ளூர சிரிக்க மட்டுமே செய்தான். வாங்கின் முகத்தோடு ஐ தன் முகத்தை நெருக்கமாக வைத்துக் கொண்டபோது வாங்கின் காதில் ஐ யின் சூடான மூச்சு பாய்ந்தது. ''உனது மூக்கு அவனது குப்பைக் கூடையில் கிடந்ததாகவும் அதை நீ எடுத்து உன் முகத்தில் ஒட்டிக் கொண்டதாகவும் சௌ சொல்கிறான்'' என்றான் ஐ.

வாங் தலையை நிமிர்த்தினான். ''ஒரு கள்ளக் கடத்தல்காரனிடம் நீ உனது மூக்கை விற்றுவிட்டதாகவும் அதற்கான வரியை நீ செலுத்தவில்லை என்றும் ஒரு செய்தியை சௌ பரப்பிக் கொண்டிருக்கிறான்.

வாங்கின் முகத்தில் கோபத்தின் குறி தெரிந்தது.

''நீ ஒன்றும் ஆத்திரப்படாதே. உனது மூக்கு முதல் தரமானது. மிகவும் அழகானது. உன்னுடைய மூக்கு இயற்கையான அசல் மூக்கு. சௌவின் பேச்சு அவனது அறியாமையைத்தான் காட்டுகிறது. இதை நீ பெரிதாக எடுத்துக் கொள்ள வேண்டாம்'' என்று ஐ புத்திமதிகளையும் சொல்லி வைத்தான்.

சௌ ஏன் இந்த மாதிரி எல்லாம் வதந்திகளைக் கிளப்பி விடுகிறான் என்று ஆச்சரியத்துடன் தலைகுனிந்தான் வாங்.

அங்கிருந்து கிளம்புவதற்கு முன், ''எல்லாவற்றையும் விட ஒற்றுமையைக் கடைப்பிடிப்பதுதான் பிரதானம் என்பதில் நீ உறுதியுடன் இருக்கவேண்டும்'' என்று அறிவுரையும் வழங்கினான்.

சௌவிடம் ஒற்றுமையின் அவசியத்தைப் பற்றி உபதேசம் செய்வதற்காக அவனது இருப்பிடம் நோக்கி விரைந்து சென்றான் ஐடு..வான்ஜி.

(ஐடுவான்ஜி என்றால் ஒற்றுமைக்காக அயராது உழைப்பவர் என்றுபொருள்.)



# 14 என் அம்மா

நானும் என் காதலியும் நெருங்கி இணைந்தபடி வழவழப்பான தார் சாலையில் பொழுது போக்காக உலாவியவாறு நடந்து சென்று கொண்டிருந்தோம்.

சாலையில் செல்கிறவர்கள் எல்லோரும், எங்களையே வியப்போடு உற்றுப்பார்த்துக் கொண்டே சென்றனர். நான் எளிய சுபாவமும் அனுபவம் இல்லாதவனுமாக இருந்தேன். அந்த அழகிய பெண் வருங்காலத்தில் எனது மனைவியாகப் போகிறவள். அதுவே அவர்கள் எங்களைப் பார்த்து ஆச்சரியப்படுவதற்குக் காரணமாயிற்று.

''இன்று நாமிருவரும் உங்கள் வீட்டிற்குப் போகலாமா?'' என்று எனது வருங்கால மனைவி என்னைக் கேட்டாள்.

''ஏன்? என்ன விஷயம்?''

''உங்கள் அம்மாவைப் பார்த்து, அவர்கள் என்னைத் தங்களது மருமகளாக ஏற்றுக் கொள்வார்களா என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காகத்தான்.''

இந்த எதிர்பாராத வேண்டுகோள் என்னை கவலைக்குள்ளாக்கியது. எனது தாயார் தலைமுடி அலங்காரம் செய்கிறவர். மேலும் அவர் படிப்பறிவு இல்லாதவர். இது அவளுக்குத் தெரிந்துவிட்டால் என்னைத் திருமணம் செய்து கொள்ள விரும்பமாட்டாளே என்று நான் விசாரப்பட்டுக் கொண்டிருந்தேன். இதனால் தான் கடைத்தெரு வழியாக நாங்கள் செல்ல நேர்ந்தபோதெல்லாம் எனது தாயார் வேலை செய்யும் முடி திருத்தும் நிலையம் பக்கமாகச் செல்வதைத் தவிர்த்து வேறு சுற்றுப் பாதை வழியாகச் செல்வோம்.

இது என் தாயாரை நான் வெறுப்பதனால் அல்ல. நான் என் அன்னையிடம் பக்தியோடு பணிவுடன் நடந்து கொள்வேன். நான்

இன்றும் கூட எனது ஆரம்பப் பள்ளி நாட்களை நன்றியுடன் ஞாபகத்தில் வைத்துள்ளேன். ஒவ்வொரு நாள் காலையிலும் என் தாய் என் தலையைக் கோதி அன்புடன் முத்தமிட்டு, ''சாலையைக் கடக்கும் போது ஜாக்கிரதையாக கவனித்து நடந்து செல். உனது ஆசிரியரிடம் பணிவுடன் நடந்து கொள்.'' என்று சொல்லி அனுப்பிவைப்பார். பள்ளிக்கூடம் விட்டதும் என் அம்மாவைப் பார்க்க ஆவலோடு முடி திருத்தும் நிலையத்திற்கு ஓடுவேன்.

என் காதலியைத் திருமணத்திற்கு இணங்க வைக்க முயன்றபோதெல்லாம் அவளது அம்மாவையும் எனது அம்மாவையும் ஒப்பிட்டுப் பார்க்க ஆரம்பித்தேன்.

கீழ்த்தரமான பணிசெய்யும் என் தாயார் சற்று வாயாடி. உரக்கப் பேசுகிறவர். ஆனால் இதற்கு மாறாக என் காதலியின் தாயார் அமைதியாகப் பேசுகிறவர். நாகரிகமான ஆடைகள் அணிந்து கொண்டிருப்பவர். அவளது கூந்தல் சுருள் சுருளாக அவரது தோள்பட்டை வரையில் தொங்கிக் கொண்டிருக்கும். மேலும் அவர் பியானோ வாசிப்பதில் கைதேர்ந்தவர். இதை என் காதலி அடிக்கடி பெருமையுடன் சொல்லிக் கொள்வது வழக்கம். நான் அவர் வீட்டிற்குப் போகும் போதெல்லாம் அவர் என்னிடம் மிக்க அன்போடு பழகுவார். இன்முகத்தோடு எனக்கு இனிப்புகள் கொடுத்து என்னுடன் பேசிக் கொண்டிருப்பார். எங்கள் வீட்டை நினைக்கும் போதெல்லாம் அவர்கள் வீடு ஓர் தனி உலகம் போல் எனக்குத் தோன்றும். முன்பு என் தாயார் பற்றிய அவர்களது விசாரணைகளை எல்லாம் நான் எப்படித் தட்டிக் கழித்தேன் என்பதை எல்லாம் நான் மறந்துபோனேன்.

''என்ன யோசனை?'' என்று என்னைத் தொட்டு அசைத்துக் கேட்டாள் என் காதலி.

நான் என்ன சொல்ல முடியும்!

''சரிபோகலாம்'' என்றேன்.

உண்மையில் வேறு வழி இல்லை. என் அம்மா வீட்டில் இல்லாமல் இருக்க வேண்டுமே என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டேன். அன்று ஞாயிற்றுக்கிழமை. விடுமுறை நாளாக இருந்தாலும் அம்மா கடைவீதிக்குப் போயிருக்கலாம்.

அன்று அப்படித்தான் நடந்தது. நாங்கள் வீடுபோய் சேர்ந்தபோது அம்மா வெளியில்தான் சென்றிருந்தார். நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். இன்றைய நெருக்கடியை எப்படியோ நான் சமாளித்துவிட முடியும்.

'ஹோ! இதுதான் உங்கள் அம்மாவா?'' சுவரில் மாட்டி இருந்த ஒரு படத்தை சுட்டிக்காட்டி என் காதலிகேட்டாள்.

''ஆம்'', என்று வேண்டா வெறுப்பாக சொல்லி வைத்தேன்.

''உங்களுக்கு அருமையான ஒரு அன்னையார் இருக்கிறார்கள்.'' என்று மகிழ்ச்சிப் பெருக்கோடு சொன்னாள்.

எனது அருமையான தாயார்! அவளுக்கு எப்படித் தெரியும்?

''உண்மையாகவே சொல்கிறேன். உங்கள் தாயார் அன்பானவர். ஒவ்வொரு மாதமும் அவர், எங்கள் அண்டை வீட்டில் பக்கவாதத்தால் பாதிக்கப்பட்ட ஒருவருக்கு முடி திருத்தும் சிரமத்தை எடுத்துக் கொள்வார். இதற்காக அம்மா பணம் எதுவும் பெற்றுக் கொள்ளமாட்டார்கள். என் அம்மாவும் முடிதிருத்திக் கொள்ள இவரிடம்தான் செல்வது வழக்கம். நான் சிறுமியாக இருந்தபோது என் அம்மாவுடன் கூடவே நானும் போவேன். அப்போது என்னைத் தூக்கி ஆசையோடு முத்தமிட்டுக் கொஞ்சுவார். உண்மையில் பெற்ற தாயைப்போல வாஞ்சையுடன் என்னுடன் பழகினார்'' என்றாள்.

இத்மான பரவச உணர்வு என்னுள் தோன்றி உடல் எங்கும் மின்சாரம்போல் பரவியது. வேலை செய்யும்போது அணியும் வெள்ளை உடையில் இருந்த என் அம்மா அப்போதுதான் வீட்டிற்குள் நுழைந்தார்.

''விருந்தினரைக் காக்க வைத்துவிட்டதற்காக் வருந்துகிறேன்'' என்று சொல்லிவிட்டு எங்களுக்கு முகமன் கூறினார் அம்மா.

அம்மாவிற்கு என் காதலியை அறிமுகம் செய்துவைக்க நான் என் வாயைத் திறப்பதற்குள் அவளே ஓடிச் சென்று ''அம்மா'' என்று கூவிக் கொண்டே ஆவலோடு என் தாயாரைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.



# 15 சாலை விளக்குகள்

விமான நிலையத்தில் ஒரு பிரயாணியை இறக்கிவிட்ட அதே சமயம் யாரோ ஒருவர் 'டாக்ஸி' என்று அழைத்தார். என்ன அதிர்ஷ்டம்!

அந்த அழகியப் பெண் காரில் ஏறியபோது அவளை ஜாடையாகப் பார்த்தேன். அவள் அப்படி ஒன்றும் பிரமாத அழகுஇல்லை. ஆனால் உண்மையில் சாதாரணமாக பார்ப்பதற்கு அழகாகத்தானிருந்தாள். ஏரிபோன்ற அவளது கண்களுக்கு அடர்த்தியான அவளது இமையின் ரோமங்கள் பாதுகாப்பாக இருந்தன. அவளது உதடுகள் அசையாது இறுக மூடி இருந்தன.

'மின்ஷெங் மருத்துவமனை' என்று போகவேண்டிய இடத்தை சொல்லிவிட்டு ஆசனத்தில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டாள். மிகவும் களைப்படைந்திருப்பதாகத் தோன்றினாள். காரின் மீட்டரை இயக்கிவிட்டு மிகுந்த கவனமுடன் காரை ஓட்டினேன். பின் பார்வை கண்ணாடி வழியாக அவளைப் பார்ப்பதை என்னால் தவிர்க்க முடியவில்லை. என்னுடைய பார்வை அவளுக்குத் தொந்தரவாக இருக்குமோ என்று அஞ்சினேன்.

மருத்துவ மனைக்கு பாதிதூரத்தில் போய்க்கொண்டிருந்த போது அவள் அழுது கொண்டிருப்பதைக் கவனித்தேன். மழையில் நனைந்த தாமரை மலர்போல அவள் காணப்பட்டாள். அவளுக்காக நான் மிகத்துயரமடைந்தேன்.

''நோயாளியைப் பார்க்கப் போகிறீர்களா?'' என்று தயக்கத்துடன் கேட்டேன். நான் பிரயாணிகளிடம் பேசும் பழக்கம் கிடையாது.

கண்ணீரைத் துடைத்துக் கொண்டே லேசாகத் தலையை ஆட்டினாள்.

''உங்கள் நண்பரின் உடம்புக்கென்ன?''

முட்டாள்தனம்!

நான் ஏன் இப்படிக் கேட்க வேண்டும்? இத்தனை வருஷங்களாக கார் ஓட்டிவருவதில் எனக்கு ஆத்திரமூட்டும் விஷயம் என்னவென்றால் பிரயாணிகளின் புலம்பலைக் கேட்டுக் கொண்டு வருவதுதான். இம்மாதிரி கேள்வி கேட்கும் கெட்டபழக்கம் எனக்கு எப்படி வந்தது? நான் எப்படி அவளை இந்த கேள்வி கேட்கலாம்?

''அவர் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறார்!'' துயரத்துடன் வார்த்தைகள் விட்டுவிட்டு வந்தன. அவளுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. அணையை உடைத்துக் கொண்டுவரும் வெள்ளம்போல கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்தது. என்மனம் இரங்கித் தவித்தது.

என் வாழ்நாளில் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த சிலரைப் பார்த்திருக்கிறேன். இறந்து போனவர்களுக்கும் இவர்களுக்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால் இவர்கள் இன்னும் சுவாசித்துக் கொண்டிருக்கிறார்கள். அவ்வளவுதான். உண்மையில் நேசம்மிக்க ஒருவரைப் பார்க்க அவள் ஆர்வத்தோடு இருக்கலாம். ஒருகண தாமதம்கூட அவளுக்குப் பலமணி தாமதமாகப்படலாம்.

பெருந்தொகையில் அபராதம் கட்டவேண்டி வருமே என்ற ஆபத்தையும் பொருட்படுத்தாமல் சாலைசமிக்ஞைகளையும் மதிக்காமல் காரைவிரட்டிக் கொண்டு சென்றேன். எப்படியோ அவளுக்கு என்னால் இயன்ற உதவியைச் செய்ய விரும்பினேன். வேகமாக ஓட்டிச் சென்று ஆஸ்பத்திரி வாசலில் கிரீச்சென்ற சப்தத்துடன் காரை நிறுத்தினேன். வெற்றிப் பெருமிதம் என் உள்ளத்தில் பெருக்கெடுத்தது. எனக்கு நன்றி செலுத்தும் பார்வை அவளது கண்களில் வெளிப்படுமென்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் எனது கன்னத்தில் பலமான அடிதான் விழுந்தது.

''சாலை சமிக்ஞைகளை மதிக்காமல் காரை விரட்டிக் கொண்டு வரும் உன்னைப் போன்ற மோசமான டிரைவர்களை எல்லாம் குற்றவாளிக்கூண்டில் ஏற்றி விசாரிக்க வேண்டும். உன்னைப் போன்ற ஒரு டிரைவர் செய்த தவறினால் தான் என் கணவர் மருத்துவமனையில் மரணப்படுக்கையில் கிடக்கிறார்,'' என்று சொல்லிவிட்டு குப்பையை எடுத்தெறிவது போல டாக்ஸிகட்டணத்தை என் முகத்தில் வீசி எறிந்தாள்.



## 16 விதண்டாவாத வியாதி

விதண்டாவாத வியாதியால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு நோயாளியுடன் நடந்த உரையாடலைப் பற்றி ஒரு டாக்டர் என்னிடம் சொன்னார்:

டாக்டர்: தயவு செய்து இப்படி அமருங்கள்.

நோயாளி: ஏன்? நிற்பதற்கு உரிய எனது உரிமையை நீர் எதிர்க்கிறீரா?

டாக்டர். (ஒரு கோப்பையில் தண்ணீரை ஊற்றிக் கொண்டே) இங்குச் சற்று இளைப்பாறுங்கள். இந்தத் தண்ணீரைக் குடியுங்கள்.

நோயாளி: பரிகாசமா செய்கிறீர்? பிரச்சினையின் ஒரு பக்கத்தைத்தான் முன் வைத்துள்ளீர். எல்லாத் தண்ணீருமே குடிக்கத் தகுதியுடையது அல்ல. இதில் நீர் விஷத்தைக் கலந்திருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது நிச்சயமாக இந்தத் தண்ணீர் குடிக்க லாயக்கற்றது. ஆபத்தானதும் கூட.

டாக்டர்: தண்ணீரில் விஷத்தைக் கலக்கவில்லை என்று நான் உறுதி கூறுகிறேன்.

நோயாளி: நீர் விஷத்தைக் கலந்திருக்கிறீர் என்று யார் சொன்னது? அப்படி நான் உம்மீது குற்றம் சுமத்தினேனா? அப்படி எந்த அதிகாரி உம்மீது குற்றம் சுமத்தியது இல்லையே! இருந்தும் நான் சொன்னதாகச் சொல்கிறீர். விஷத்தைக் கலப்பதைவிட இப்படிப் பேசுவதே மிகக் கொடுமையான விஷம்.

டாக்டர்: (பெருமூச்சு விட்டபடி) இன்றைய பகல் மிகவும் இதமாக இருக்கிறது.

நோயாளி: இது சுத்தப் பேத்தல். உதாரணமாக வடதுருவத்தில் இன்று காலநிலை மிகப் பயங்கரமாக இருக்கும். அங்குக் காற்று ஊளையிட்டுக் கொண்டிருக்கும். இரவு நேரம் எல்லையின்றி நீண்டிருக்கும். பனிப்பாறைகள் ஒன்றை ஒன்று மோதி நசுக்கிக் கொண்டிருக்கும்.

டாக்டர்: இது வட துருவமல்லவே.

நோயாளி: வட துருவம் என்பதாக ஒன்று இருப்பதை உம்மால் மறுக்க முடியுமா? அப்படிச் செய்தால் நீர் உண்மையைத் திரித்துக்கூறுகிறீர் என்று ஆகிறது. இந்த விஷயத்தில் உமக்கு ஏதோ அந்தரங்கமான உள் நோக்கம் இருக்க வேண்டும்.

டாக்டர்: நீர் இங்கிருந்து இப்போது வெளியே செல்வது நல்லதென்று நினைக்கிறேன்.

நோயாளி: என்னை வெளியேறும்படி சொல்வதற்கு உமக்கு எந்த அதிகாரமும் கிடையாது. இது மருத்துவமனை. காவல் நிலையமல்ல. என்னைக் கைது செய்வதற்கோ தண்டனை அளிப்பதற்கோ உரிய பதவியில் நீர் இல்லை.

சில விசாரணைக்குப்பிறகு இந்த நோயாளி 'ஸியாங் ஸியாவ்' எழுத்தாளர் குழுவில் ஒரு உறுப்பினராக இருந்தவர் என்பது கண்டறியப்பட்டது. இதன் விளைவுதான் இந்த நபர் விதண்டாவாத நோயால் பீடிக்கப்பட்டுள்ளார் என்று கருதுகிறேன்.

'ஸியாங் ஸியாவ்' என்பது சில எழுத்தாளர்கள் கொண்ட ஒரு குழு. நால்வர் கும்பலின் நேரடிப் பார்வையில் இக்குழு இயங்கி வந்தது. இக்குழு அதிகாரபூர்வமற்றதாக இருந்தாலும் அடிக்கடி தவறான அறிக்கைகள் ஆதாரமற்ற குற்றச்சாட்டுகள் மூலம் அரசின் கொள்கைகளை உருவாக்கியதில் முக்கியப் பங்கு வகித்திருந்தது.

(நால்வர் கும்பல் இப்போது சிறைத்தண்டனை அனுபவித்துவருகிறது - மொ-ர்)



## 17 ஒரு சித்திரம்

எனது தகப்பனாருக்குத் தெரியாதபடி அவரது உருவத்தை வரைந்து முடித்தேன். அது ஜீவகளை ததும்ப சிறப்பாக அமைந்திருந்தது. நான் வரைந்த அந்தச் சித்திரத்தைப் பார்த்து திருப்தியுடன் நான் மகிழ்ந்து கொண்டிருக்கையில் பின்னால் இருந்து என் தந்தை, என்னைத் திட்டிக் கொண்டிருப்பதைக் கேட்டேன்.

உனக்கு என்ன துணிச்சல்! என்னை நீ அவமதித்திருக்கிறாய். உடனே இதைக்கிழித்து எறி'' என்று சொல்லி என் தந்தை என்னைப் பார்த்து முறைத்தார்.

''இது நீங்கள் அல்ல அப்பா! நீங்கள் இப்படி விகாரமாக இல்லையே'' என்று நான் பாசாங்கு செய்தேன்.

''வாயை மூடு! என்படம் எனக்குத் தெரியாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா?''

''அப்பா உண்மையில் நான் உங்கள் உருவத்தை வரைந்து கொண்டிருக்கவில்லை'' என்று சொல்லிக் கொண்டே அவர் கவனம் வேறு பக்கம் திரும்பியபோது படத்தில் ஒரு புள்ளி வைத்துவிட்டு, ''இதோபாருங்கள் அப்பா அந்தப் படத்தின் ஓரத்தில் ஒரு மச்சம் கூட இருக்கிறது'' என்றும் சொன்னேன்.

பிறகு நான் வரைந்த ஓவியத்தைப்பற்றி ஒரு வேடிக்கையான கதை புனைந்து நான் சொல்லியது என் தந்தைக்கு சந்தோஷமளித்தது. இருந்தும்கூட அவர் நம்பிக்கையின்றி என்னைப் பார்த்துவிட்டு சித்திரத்தையும் பார்த்தார்.

''நீ என்னிடம் சரியாக நடந்துகொள்ள வேண்டும். ஞாபகமிருக்கட்டும். எனது சித்திரத்தை வரைய உனக்கு அனுமதி கிடையாது.'' என்று கண்டிப்பாக சொன்னார்.

''நான் புரிந்து கொண்டேன் அப்பா. உங்களைத் தவிர மற்ற எவருடைய உருவத்தையும் நான் வரையலாம்.'' என்றேன் நான்.



# 18 மோதிர விரல்

அவனது சிநேகிதியிடமிருந்து வந்த கடிதம் காதல் மொழியைவிடவும் நேரிடப்போகும் அவலத்தைக் கொண்டு வருமோ என்று குழம்பியவனாய் அந்த மெல்லிய தபால் உறையைத் திறக்கத் தயங்கினான்.

இதற்கு முன் எந்த ஒரு பெண்ணாலும் அவன் கவரப்பட்டதில்லை.

அப்போதுதான் அந்தப்பெண் வயலின் வாத்தியத்தில் சைத்தானின் கீதம் என்ற பாடலை இனிமையாக வாசித்து முடித்திருந்தாள். இதற்கு முன்பு, தான் கைப்பிடிக்க விரும்பும் தனக்குப் பொருத்தமான எந்த ஒரு பெண்ணையும் அவன் பார்த்ததில்லை. தன்னையும், தான் ஒரு கம்பீரமான கல்லூரி மாணவன் என்ற கர்வத்தையும் மறக்கும்படி செய்து, காதலானது மிகவிரைவாகவும், வலுவாகவும், வெளிப்படையாகவும் இனிமையாகவும் அவனது இதயக் கதவைத் தட்டியது.

அன்றையதினம் முதலாகவே அவளது மெல்லிய உருவமும் வசீகரத் தோற்றமும் அழகிய கண்களும், அவள் வயலினில் கீதம், இசைத்த பாங்கும், அவனை அவளது கைதியாக்கிவிட்டது. மூன்று நாள்கள் சென்றது. அவளை அவன் ஒரு கடைக்கு அழைத்துச் சென்றான். கையில் ஒரு கட்டு கரன்ஸி நோட்டுகளை எடுத்துக் கொண்டு, ''உனக்கு ஒரு பரிசு வாங்கிக் கொடுக்க விரும்புகிறேன்'' என்று சொன்னான்.

''என்ன மாதிரியான பரிசு அது?''

''ஒரு மோதிரம்.''

''இது முறையானதென்று நீங்கள் கருதுகிறீர்களா?''

''ஆம். நான் உன்னை முதன் முறையாக சந்தித்தபோது, உனது மற்ற விரல்களெல்லாம் மூர்க்கமாக வாத்தியத்தின்

நரம்புகளில் விளையாடிக் கொண்டிருந்த போது மென்மையான உனது மோதிரவிரல் மட்டும் அமைதியாக இருந்தது. உனது இடதுகையின் மோதிரவிரல் நீர் பரப்பின் மேல் பறக்கும் தும்பியைப் போல் இயங்கிக் கொண்டிருந்தது. அந்த விரல் ஒப்புவமை இல்லாதது. பெருமைமிக்கது, என்று என் மனதிற்குள் புகழ்ந்து கொண்டிருந்தேன். அந்த அழகிய - விரலுக்கு மேலும் அழகு செய்ய ஒரு மோதிரம் வாங்கி அணிவிப்பதற்கு நான் பாக்கியம் செய்திருக்க வேண்டுமென்று உணர்கிறேன்.''

இந்த இனிய வார்த்தைகளைக் கேட்டு அவள் அதிர்ச்சியுற்றாள். அவளது கண்களில் மிரட்சி தென்பட்டது.

அவளது உள்ளத்தைக் கவர்ந்துவிட்டதாக எண்ணிய அவன், தன்னை மணந்துகொள்ளும்படி அவளைக் கேட்டான். இதைக் கேட்ட அவள் லேசாக சிரித்தபடி தனது முடிவை கடிதம் மூலம் நாளைய தினம் தெரிவிப்பதாக உறுதி அளித்தாள்.

இப்போது அந்தக் கடிதத்தைக் கையில் வைத்துக் கொண்டிருந்த அவன் தைரியம் அடைந்தவனாய் கடித உறையைப் பிரித்தான். அதிலிருந்து ஒரு மோதிரமும் ஒரு துண்டு கடிதமும் கீழே விழுந்தது. அந்தக் கடிதத்தில் மிகசுருக்கமாக ஒருவாக்கியம் எழுதப்பட்டிருந்தது:''

''யதார்த்தத்தில் எனது மோதிர விரல் அப்படி ஒன்றும் சிறப்பானது அல்ல.'' கடிதத்தைப் படித்த அவன் நிலைகுலைந்து போனான்.



# 19 தொலைபேசி அழைக்கிறது

பதவியிலிருந்து ஓய்வு பெறும் அதிகாரிகளின் நலனுக்கான திட்டத்திற்கிணங்க ரயில்வே போக்குவரத்துத் துறையிலிருந்து ஹான் வான்ஹே ஓய்வுபெற்ற மூன்றாண்டுகளுக்குப் பிறகு அவரது வீட்டிற்குத் தொலைபேசி இணைப்பு கொடுக்கப்பட்டது.

தொலைபேசியைப் பொருத்தி வைத்துவிட்டு ஊழியர்கள் சென்ற பிறகு ஹானும் அவரது மனைவியும் தொலைபேசியைச் சுற்றிச் சுற்றி வந்து ஒலிவாங்கியை எடுத்து அதன் குரலைக் கேட்டனர். அவர்கள் உள்ளம் பூரித்தது. இந்தத் தொலைபேசி அவரது கடந்தகால சேவைக்கும் அவரது புகழுக்கும் ஒரு அடையாளச் சின்னமாக் இருந்ததோடு அல்லாமல் அரசாங்கத்திற்கு அவர் ஊழியம் செய்ததற்கு மந்திரி சபையின் புகழ்மாலையின் சின்னமாகவும் விளங்கியது.

ஒரு பாட்டுகூடப் பாடாமல் இறந்துகிடக்கும் ஒரு பறவையைப் போல ஹானின் தொலைபேசி அழைப்பொலி எதுவுமின்றி ஓய்ந்து கிடந்தது. முதலில் ஹான் சரியான மணியைத் தெரிந்து கொள்ளவும் வானிலை அறிவிப்பை அறியவும் தொலைபேசியைச் சுழற்றுவார். சில சமயம் தொலைக்காட்சி நிகழ்ச்சியை அறிந்து கொள்ளவும் தொலைபேசியை உபயோகிப்பதுண்டு. நாளடைவில் தொலை பேசி எண்களை சுழற்றி அவருக்கும் அலுத்துவிட்டது. இதற்குப்பதிலாக ஏதாவது தொலைபேசியில் அழைப்பு வராதா என்று அதையே பார்த்துக் கொண்டவாறு இருப்பார்.

தனக்குள் பெருமூச்சு விட்டபடியே அவரது மனைவி தனது கணவர் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் என்பதைப் புரிந்து வைத்திருந்தார். அவர் பதவியில் இருந்தபோது அவரது இலாகாவின் செலவில் அவரது வீட்டில் தொலைபேசி இருந்தது. களைத்துப்போய் வீடு திரும்பும்போது தொலைபேசி மணி அடித்துக் கொண்டிருப்பதை அவர் வெறுத்தார். அதுவும் கூட

நள்ளிரவுக்குப்பின் மணி அடிப்பது நிச்சயமாகத் தொந்தரவுதான். ஏனென்றால் ஏதாவது சிக்கலானப் பிரச்சினை ஏற்பட்டிருந்தாலோ அல்லது விபத்து ஏற்பட்டிருந்தாலோதான் பின்னிரவில் தொலைபேசி அலறும். ஆனால் இப்போது.....

ஆனால் ஐந்தாவது நாள் காலை அந்த மௌனப் பறவை கோரிக்கையோடு கூவியது. ஹான் பால்கனியில் பூச்செடிகளுக்கு நீர்ஊற்றிக் கொண்டிருந்தார். அவரது மனைவி சமையல் அறையில் பால் காய்ச்சிக் கொண்டிருந்தாள். கைவேலையை அப்படியே போட்டுவிட்டு தொலைபேசி அருகே இருவரும் ஓடி வந்தனர். நூறு மீட்டர் ஓட்டப்பந்தயத் தொடக்கத்திற்கான துப்பாக்கி வெடிச்சத்தம்போல தொலைபேசி ஒலியைக் கேட்டு இருவரும் அதனருகில் ஓடிவந்து நின்றனர்.

முதலில் ஹான் மிகுந்த வேகத்தோடு ஒலிவாங்கியை எடுத்து, ''ஹான் பேசுகிறேன்'' என்றார்.

அவரது கண்களில் படர்ந்திருந்த ஒளி மங்கிவிட்டது. ஒலிவாங்கியை மெதுவாகக் கீழே வைத்துவிட்டு ஏமாற்றத்தோடு மனைவியிடம், ''முதல் உதவி நிலையம் என்று தவறாக எண்ணி நம்மைக் கூப்பிட்டு விட்டார்கள்.'' என்று சொன்னார்.

வயோதிகத் தம்பதிகள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு மீண்டும் தங்கள் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டனர்.

இரண்டாவது தடவையாக மணி அடித்தபோது ஹான் அவசரப்படவில்லை. சில வினாடிகள் சென்று தான் சாவதானமாக ஒலிவாங்கியை எடுத்தார். எடுப்பதற்கு முன் தொலைபேசியை ரீங்காரம் செய்யவிட்டுவிட்டு அமைதியாக ஆர்வமின்றி எடுத்தார்.

''ஹலோ உங்கள் தொலைபேசி எண் 8350 தானே?'' அநேகமாக அது ஓர் இளைஞனின் குரலாக இருக்கலாம். அமைதியின்றி பரபரப்போடு பேசினான். அவரது மனைவிக்கும் கூட அந்தப் பேச்சைக் கேட்க முடிந்தது. வேகமாக ஒலிவாங்கியைக் கீழே வைக்க எண்ணினார் ஹான்.

''மன்னிக்கவும் இது 8350 அல்ல''

''தோழரே தயவுசெய்து வைத்துவிடாதீர்கள். அவசரமாக ஒரு ஆம்புலன்ஸ் வண்டியை அனுப்பிவையுங்கள். என் தாயார் சுய நினைவிழந்து மயங்கிய நிலையில் மிக அபாய கட்டத்திலிருக்கிறார். கருணை காட்டுங்கள்.''

''தோழரே இது அல்ல......''

''ஓர் உயிரைக் காப்பாற்றுவது மிக மிக முக்கியம்! கெஞ்சிக் கேட்கிறேன். தயவு செய்து இந்த உதவியைச் செய்யுங்கள்.''

''உன் தாயார் எங்கிருக்கிறார்?''

ஹான் சற்றுப் பொறுத்து புருவத்தை உயர்த்தியபடியே கேட்டார்.

இருப்பிடத்தை சொல்லிவிட்டு ஹான் ஒலிவாங்கியைக் கீழே வைப்பதற்கு முன்னதாகவே மீண்டும் நன்றி தெரிவித்துக் கொண்டான் இளைஞன்.

''இது ஓர் உயிர்பற்றியது. சாவதா, பிழைப்பதா என்ற பிரச்சினை. இதில் நீங்கள் ஏன் மாட்டிக் கொள்ள வேண்டும். எப்படி இதற்கு நீங்கள் துணிந்தீர்கள்?'' என்று கேட்டாள் அவரது மனைவி (ஹான்சம் மதித்ததைக் கேட்ட அவரது மனைவி திகைத்துப் போனாள்).

மனைவிக்குப் பதில் சொல்லாமலேயே ஹான் எண்களைச் சுழற்றி தொலைபேசியில் இறைந்து கொண்டிருந்தார்.

''ஹலோ ஓய்வு பெற்ற அரசு ஊழியர்களுக்கு கார் அனுப்பும் நிலையம் தானே? ஹான் வான்ஹே பேசுகிறேன். தயவு செய்து அவசரமாக ஒரு வண்டி அனுப்பி வையுங்கள்.

''தொலை பேசியை ஹான் கீழே வைத்ததும், '' பெட்ரோலுக்கு யார் பணம் செலுத்துவது?'' என்று வினவினாள் அவரது மனைவி. அரசின் புதிய விதிகளின்படி ஓய்வு பெற்ற ஊழியர்களின் பெட்ரோல் செலவுக்காக ரயில்வே இலாகா ஒரு குறிப்பிட்ட

தொகையை ஒதுக்கி வைத்துள்ளது. அத்தொகை செலவழிக்கப்படவில்லை என்றால் அத்தொகை அந்த ஊழியரையே சேரும். ஹான் தன் மனதிற்குள் சிரித்துக் கொண்டே தன் மனைவியை நோக்கி,'' இப்படிப்பட்ட ஓர் சூழ்நிலையில் நீ என்ன சொல்லி இருப்பாய்?'' என்று கேட்டார்.

அன்று மாலையிலேயே மீண்டும் தொலை பேசி ஒலித்தது. மிகுந்த தன்னடக்கத்துடனும் நன்றியறிதலுடனும் அந்த இளைஞன் தான் பேசினான்:

''நன்றி தோழர் ஹான் அவர்களே....ஹூம்... ஹான்மாமா! எனது அன்னையார் அபாயகட்டத்தைத் தாண்டிவிட்டார். விரைவாக குணமடைந்து வருகிறார்.''

வெகுநேரம் ஹான் தனது பேரனின் தொட்டிலை ஆட்டுவதுபோல ஒலிவாங்கியை ஆட்டிக்கொண்டிருந்தார். அவரது கண்களில் நீர்முட்டி ததும்பியது. அவரது முகத்தில் மகிழ்ச்சியின் பூரிப்பு தவழ்ந்தது.

卐

## 20 காதல்

இரண்டு மனிதர்கள். ஒருவன் இளைஞன். மற்றொருவர் வயோதிகர். இருவரும் உள்நோயாளிகளாக ஓர் மருத்துவமனைப் படுக்கை"யில் படுத்திருந்தனர். இளைஞன் இருபது வயதே நிரம்பியவனானாலும் மனக்குறை உள்ளவனாகவும் உற்சாகமற்றவனாகவும் காணப்பட்டான். அவனது வாழ்க்கை ஆரம்ப கட்டமானபடியால் அவனது பல கனவுகளும் இனிமேல்தான் நனவாக வேண்டும்.

எவ்வளவோ பிரச்சினைகளும் துன்பதுயரங்களும் மலிந்து கிடக்கும் இந்த விசித்திர உலகத்தை அவன் நேசித்தான்.

அவனது வாழ்நாள் நீடித்திருக்கக்கூடுமென்று அவன் எப்படி நம்பினான்! தூங்கிக் கொண்டிருந்த அந்த வாலிபனை ஒருநாள் அந்தக் கிழவர் எழுப்பி ''தம்பி உனது தோழி உன்னைக் காண இங்கே வந்திருக்கிறாள்.'' என்றார்.

''உண்மையாகவா எங்கிருக்கிறாள்?'' ஆச்சரியத்தில் அவனது கண்களில் ஒளிபடர உற்சாகத்துடன் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தான்.

''அதோ வெளியிலே''

அவசரத்தோடு தனது கால்களைக் கீழே ஊன்றி வெளியே செல்ல வாலிபன் தயாரானபோது முதியவர் அவனைத் தடுத்து நிறுத்தினார்.

''இதற்கென நிர்ணயிக்கப்பட்டுள்ள நேரம் தவிர மற்ற நேரங்களில் பார்வையாளர்களை உள்ளே அனுமதிப்பதில்லை என்பதுதான் மருத்துவமனை விதி. ஆனாலும் அவள் உனக்காக ஓர் பரிசு கொண்டு வந்துள்ளாள்,'' என்றார் பெரியவர்.

பரிசை கையில் எடுத்துக் கொண்டான். அவனது கண்கள் குளமாயின. அவன் அவளை மனமார நேசித்தான். அவளைவிட்டுப் பிரிந்திருக்கும் எண்ணத்தையே அவனால், தாங்கிக் கொள்ளமுடியாது. இந்த நெருக்கடியான நிலைமையிலும்கூட அவளது உருவம் அவனைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றும்.

உயிருக்கு ஆபத்தான அவனது கடுமையான வியாதி அவளை மீண்டும் சந்திக்க இயலாமல் செய்துவிட்டதை அவன் அறிவான். ஆனால் இன்று அவன் மீது மற்றொரு மன்மத பாணம் எய்யப்பட்டுவிட்டது. இந்நிலையில் அவன் எப்படி தனது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலும்?

அவள் எங்கோ பயணம் செல்வதாகவும் இரண்டு மாதங்களில் திரும்பி வருவதாகவும் சொல்லிச் சென்றாள் என்றும், மேலும் உனது உடல் நிலை பற்றி நீ அக்கறை எடுத்துக் கொள்வாய் என்றும் அவள் நம்புகிறாள் என்றும் வயோதிகர் சொன்னார்.

அவனது காதல் துளிர் விட்டிருப்பதை எண்ணி அந்த வாலிபன் பூரிப்படைந்தான். மரணம் தன்னைவிட்டு விலகிப்போய் விட்டதாக அவனுக்குத் தோன்றியதுடன் அவனது ஒளிமயமான எதிர்காலம் தன் முன் சுடர்விடுவதாக உணர்ந்தான்.

இரண்டு மாதம் சென்றதும் அந்த இளைஞன் எழுந்து நடமாட ஆரம்பித்துவிட்டான். அவன் பூரண குணமடைந்தது டாக்டர்களையே வியப்பிலாழ்த்தியது.

பெரியவரிடம் விடைபெற்றுக் கொண்டு தனது வழக்கமான பாதையில் தன் சிநேகிதியின் வீட்டைநோக்கிச் சென்றான். அவன் பலதடவை அவளைப் பார்க்கத் தவறி இருக்கிறான்.

இன்று நிச்சயம் அவள் பயணம் முடிந்து திரும்பி இருக்கலாம். ஒருக்கால் அவள் படுக்கையில் படுத்தவாறே நாவல் படித்துக்கொண்டு அவனது வருகைக்காகக் காத்துக் கொண்டிருக்கலாம். அவளைப்பற்றி இவ்வாறாக எண்ணமிட்ட வாறே அவன் நடந்து சென்றான்.

சற்று நேரத்தில் அவனுக்குப் பழக்கமான கறுப்புக் கதவின் முன் நின்று லேசாக அதைத் தட்டினான்.

அழகான ஒரு சிறு பெண் கதவைத் திறந்துகொண்டு அவன் முன் தோன்றினாள். அவள் மிக்க அதிர்ச்சி அடைந்தவளாய், ''மாமா நீங்கள் இன்னும் உயிருடன்தான் இருக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

''ஷான்ஸ் என்ன உளறுகிறாய்?'' என்றான் ''மாமா எனது அத்தை உங்களைப்பற்றி என்னிடம் சொல்லி இருக்கிறாள். ஆனால் அவள் உங்களிடமிருந்து நிரந்தரமாக விலகிச் சென்றுவிட்டதாகத் தெரிகிறது.'' என்றாள்.

அவள் வேறொருவனைத் திருமணம் செய்து கொண்டதற்கு அறிகுறியாகச் சில சொற்கள் எழுதப்பட்ட அட்டை கூடத்தில் தொங்கியது.

மனம் பதறியவனாய் மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதுபற்றி முதியவரிடம் ஆலோசனை கேட்கலாம் என்று எண்ணிய வாலிபன் மருந்துவமனைக்கு விரைந்தான். அவன் அங்குச் சென்றபோது காலம் கடந்துவிட்டது. வயோதிகர் இறந்துபோய்விட்டார்.





# 21 இளம் பெண்ணும் வாலிபனும்

வெயில் காணாத குளிர் காற்று வீசிக் கொண்டிருக்கும் மழை காலத்து ஒரு காலைநேரத்தில் அந்தப் பெண்ணும் வாலிபனும் தெருவில் நெருங்கி நடந்து சென்று கொண்டிருந்தனர். அவன் முழுக்கால் சட்டையும் நீளமான மேல்சட்டையும் அணிந்திருந்தான். அவன் பெயர் லூசென். அந்தப் பெண் சௌஸிங் கறுப்புக் கம்பளி கால்சட்டையும் நீண்ட மேல் சட்டையும் அணிந்திருந்தாள். கழுத்தில் சிவப்புத் துண்டு ஒன்றையும் சுற்றிக் கொண்டிருந்தாள்.

சமீப நாட்களில் சௌஸிங் வேறு காரியங்களில் ஈடுபட்டிருந்தாள். அவளை அறியாத ரகசியம் எதுவும் லூசென்னிடம் உள்ளதா என்பதை அறிய விரும்பினாள் சௌ.

அவள் மீது அவன் உயிரையே வைத்திருந்தான். ஆயினும் அவனது அமைதியில் ஆழங்காண முடியாத ஏதோ ஓர் மர்மம் உள்ளதாக அவள் எண்ணினாள்.

பூங்காவிலுள்ள குழந்தைகள் விளையாடும் மைதானத்துக்கு இருவரும் சென்றனர். அங்கு யானை உருவில் அமைந்திருந்த சறுக்குப்பலகையில் அவன் ஏறிக்கொண்டு அவளும் ஏற உதவினான். அவள் குறும்புத்தனமாக அவனது காதைத் திருகி

நகைச் சுவையான ஒரு கதை சொல்லும்படி அவனை வற்புறுத்தினாள். அவள் விரும்பியபடி அவனும் ஒரு கதை சொன்னான்.

லூ கதை சொல்லி முடிந்ததும் செள ஒரு கதை சொன்னாள்: ''நான் கிராமப்புறத்தில் தங்கி இருந்த சமயம் ஒரு இளைஞன் தன் சிநேகிதியை சைக்கிளின் பின்புற இருக்கையில் அமர்த்திக் கொண்டு - அவளுக்கு வைத்தியம்பார்க்க - மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தேன். வழியில், தெருவின் ஒரு சந்திப்பில், தன்வீட்டின் கூரையிலுள்ள புகைபோக்கியைப் பழுதுபார்த்துக் கொண்டிருந்த ஒரு கிழவர் தவறிக் கீழே விழுந்துவிட்டார். இதைக் கண்ட அந்தப் பெண் தன்னை இறக்கிவிட்டு அந்தக் கிழவரை முதலில் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லுமாறு தன் நண்பனைக் கேட்டுக் கொண்டாள். ஆனால், அவன் அவ்வாறே செய்ததும் அவள் ஆத்திரம் அடைந்தாள். அவள் அப்படிக் கோபித்துக் கொண்டதைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டாள்.

லூ புன்னகை செய்தவாறே தயங்காமல், ''அந்தப் பெண் தன்னைச் சோதனை செய்கிறாள் என்பது அந்த வாலிபனுக்குப் புரியவில்லை. தனது தோழியின் நலனைவிடக் கிழவனின் நலனையே அவன் முக்கியமாகக் கருதிவிட்டான் என்று அந்தப் பெண் நினைத்திருப்பாள்.'' என்று சொன்னான்.

''ஏ குட்டி செளஸிங் உனக்கு என்ன ஆயிற்று?''

''ஊம், ஒன்றுமில்லை.''

''என்மீது உனக்குக் கோபமா?''



# 22 சமத்துவம்

பிரயாணிகள் பஸ்ஸில் ஏறி அமர்ந்துவிட்டார்கள். ஆனால் ஓட்டுனரைக் காணவில்லை.

நடத்துனர் ஒல்லியான ஒருபெண் தன் கைகளைக் கட்டியபடி பஸ்ஸின் படிக்கட்டில் நின்றிருந்தாள். பஸ் புறப்படத் தாமதம் ஆவதைப்பற்றி பிரயாணிகளின் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமே என்ற பொறுப்பின்றி அவள் நின்றிருந்தாள்.

விறைத்தபடி அவள் நிற்பதைக்காணும் எவருக்கும் ''நீ எப்போதுமே புன்னகை செய்யமாட்டாயா? உனது அழகிய நண்பனைக் கண்டால்கூட நீ இளநகை புரியமாட்டாயா?'' என்று அவளைப் பார்த்துக் கேட்கத் தூண்டும்.

ஆனால் ஒரு மூதாட்டி எப்படியோ அவளைத் தள்ளிக் கொண்டு பஸ்ஸில் நுழைந்துவிட்டாள்.

''போ வெளியே போ வெளியே'' என்று நடத்துனர் பெண் உரத்த குரலில் கத்தியும் பயனில்லை.

''நான் நகரத்துக்கு என் மகளைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறேன். அவளுக்குக் கொழு கொழுவென்று ஓர் அழகான ஆண் குழந்தை பிறந்திருக்கிறது.'' என்று சொல்லிக்கொண்டே பயணச் சீட்டை வாங்கியவருக்கு பஸ்ஸில் உட்கார இடமில்லை என்பது தெரியவந்தது. பஸ்ஸில் O'-என்று அடையாளமிடப்பட்ட ஒரு இருக்கை மட்டும் காலியாக இருந்தது. மூதாட்டி அந்த இடத்தை நெருங்கியபோது நடத்துனர் அவளைத்தடுத்து; உனது சீட்டு நின்று பயணம் செய்யத்தான். உனக்கு உட்கார இருக்கை கிடையாது,'' என்று கூறிவிட்டாள்.

பஸ்ஸில் இருந்தவர்கள் அனைவரும் கொல் என்று சிரித்தனர்.

அந்த சமயம் மிக அவசரமாக ஒரு பிரமுகர் பஸ்ஸில் ஏறினார். தூய்மையாக உடை அணிந்திருந்த அவரது செயலர் மரியாதையோடு அடக்கத்துடன் நடத்துனரை அணுகி, ''எங்கள் நிறுவனத்தின் தலைவரின் கார் பழுதாகி நின்றுவிட்டது. ஓர் அவசரக்கூட்டத்தில் கலந்து கொள்ள அவர் நகரத்துக்குச் செல்ல வேண்டியுள்ளது'' என்று சொன்னார்.

முதலில் தீர்க்கமான பார்வையுடைய செயலரைப் பார்த்த நடத்துனர் பிறகு பானை வயிற்றுத் தலைவரையும் பார்த்துவிட்டு கடைசியாக 'O' இருக்கையைக் காட்டினாள். தலைவர் அமைதியாக அவர் உருவத்துக்குப் பொருத்தமாக இருந்த அந்த இருக்கையில் அமர்ந்தார். இது தனக்காகவே பதிவு செய்யப்பட்டுள்ளதாகவும் இது நியாயமானதே என்றும் கருதிக்கொண்டார். அவர் சிகரெட்புகையை ஊதிக் கொண்டே இருந்தது நின்று கொண்டிருந்த மூதாட்டிக்கு இருமலை கிளப்பிவிட்டு அவளுக்கு மூச்சுவிடுவதை கடினமாக்கிவிட்டது.

பஸ்ஸில் அமைதி நிலவியது.

ஓட்டுனர் போக்குவரத்துத்துறை நிர்வாகியுடன் மெதுவாக வந்து கொண்டிருந்தார். நிர்வாகி திருப்தி அடைந்த முகபாவத்துடன் கையில் இரைச்சலிடும் ஐந்து கோழிகளையும் எடுத்து வந்தார். கிராமத்திற்கு வந்திருந்த அவரது பயணம் பயனுள்ளதாகவே அமைந்தது.

தனது 'O' இருக்கையில் வேறொருவர் அமர்ந்திருப்பதைக் கண்ட நிர்வாகி முகம் சுளித்து திடீரென வெகுண்டு ''எழுந்திரு வெளியே போ'' என்று உரக்கக் கத்தினார். அவரது குரல் ராஜகுடும்பத்துக்கு கட்டியங்கூறுபவனுடைய குரல்போன்று ஒலித்தது.

செயலர் குழம்பியவனாய் முன்போலவே ராஜ தந்திரமான வார்த்தைகளால் நிலைமையை விளக்கினார். ஆனால் நிர்வாகி திமிருடன் தலைவரை உட்கார அனுமதிக்க மறுத்துவிட்டார்.

''தலைவர்? நான் எத்தனையோ தலைவர்களைப் பார்த்திருக்கிறேன். போக்குவரத்துத் துறையின் தலைவர்தான் எனக்கு மேலதிகாரி. நான் அவரைத்தான் தலைவராக ஒப்புக்கொள்வேன். எழுந்திரு. இடத்தைக் காலி செய்'' என்று கத்தினார்.

பஸ்ஸில் இருந்த பயணிகள் இந்த வேடிக்கையைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தனர்.

''யாரது? அது என் மருமகன் ஆயிற்றே'' திடீரென நிர்வாகியை - சாலைப்போக்குவரத்தை ஆள்பவரை - அடையாளம் கண்டு கொண்டாள் மூதாட்டி. நிர்வாகி திரும்பி அந்த அம்மையாரைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தார். அவருக்குத் திருமணம் நடந்து மூன்று ஆண்டுகள் ஆனபோதிலும் இடையில் தன் மாமியாரைப் பார்க்க அவருக்குச் சந்தர்ப்பம் வாய்த்ததில்லை.

''அவர் எனது மகனின் பாட்டியார்! நீங்கள் எப்போது கிளம்பினீர்கள்? எனக்கு முன்னதாகவே செய்தி தெரிவிதிருக்கக் கூடாதா?''

''அதற்கு நேரமில்லை. செய்தி கிடைத்த உடனேயே நான் புறப்பட்டுவிட்டேன்.''

''நீங்கள் வெகுதூரம் நடந்து வந்திருப்பீர்கள்!''

''அது ஒன்றும் எனக்குச் சிரமமில்லை. என்பேரன் எப்படி இருக்கிறான்?''

''அவன் பிறந்தபோது மூன்று கிலோ எடை இருந்தான்.

''சந்தோஷம். என்ன அழகு!''

நிர்வாகி தனது இருக்கையில் தன் மாமியாரை அமர்த்தினார். பஸ்ஸில் இருந்தவர்கள் அனைவரும் சிரித்தனர்.

இப்போது மூதாட்டி 'O' இருக்கையில் அமர்ந்துவிட்டார். நிர்வாகி இஞ்சினை மூடி இருக்கும் தகட்டு ஆசனத்தின் மீதும்;

தலைவர் கருவிகள் வைக்கும் பெட்டியின் மீதும் அமர்ந்து கொண்டனர். செயலர் கதவோரம் கம்பியைப் பிடித்துக் கொண்டு நிற்கத்தான் முடிந்தது. அந்த வயோதிக மாது தனது பையிலிருந்து கை நிறைய பேரீச்சம் பழங்களை எடுத்து தலைவரிடம் நீட்டினாள். அவர் மிக அமைதியாக அதை வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டார். நடத்துனர் மிகவும் மெத்தனமாக பிரயாணிகள் விபரப்பட்டியலை ஓட்டுனருக்கு அனுப்பி வைத்தார்.

பஸ் தனது வழியில் தொடர்ந்து சென்றது. ஆனால் ஆழ்ந்த விவாதத்திற்கு காரணமான சமத்துவம் பற்றிய வினாவுக்கு இன்னும் விடைகிடைத்தபாடில்லை:

தலைவரைக் காட்டிலும் நிர்வாகி கூடுதல் முக்கியமானவர் என்றால் செயலரைக்காட்டிலும் தலைவர் கூடுதல் முக்கியமானவர் என்றால் நடத்துனரைக்காட்டிலும் செயலர் கூடுதல் முக்கியமானவர் என்றால் மூதாட்டியைக்காட்டிலும் நடத்துனர் கூடுதல் முக்கியமானவர் என்றால்.....அப்படி என்றால் அந்த மூதாட்டி நிர்வாகியின் மாமியாரைப் போன்று அவ்வளவு முக்கியமானவரா? அல்லவா?



# 23 குற்ற நெஞ்சம்

இப்போது எனது முறை. எனது உள்ளத்தில் உறைந்து கிடக்கும் ரகசியத்தை வெளிக்கொணரக் கோரிய எனது நண்பர்கள் நேருக்கு நேராக எனது முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துப் புகையை உறிஞ்சினேன். அமைதியாக எனது கதையை ஆரம்பித்தேன்.

அந்த வருஷம் எனது தொழில் நிமித்தம் அந்த நகரத்திற்குச் சென்றிருந்தேன். அது மிகச்சிறிய நகரம். எனவே பொழுதுபோக்க அங்கு ஒரு வசதியுமில்லை. ஒருநாள் நகரின் வடக்காக புறநகர்ப்

பகுதியில் உலாவியபடி சென்று ஒரு புல்தரையில் அமர்ந்தவாறு ஒரு புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தேன்.

சில நிமிடத்தில் எனது கண்கள் சோர்வடைய சுற்றிலும் பார்த்தபோது ஆழ்ந்த சிந்தனையோடு ஒரு பெண் புல்தரையில் அமர்ந்திருப்பது என் கண்களில்பட்டது. அவள் சாதாரண பெண்தான். ஆனால் நான் வாழ்வில் சலிப்படைந்தவனாய் மந்த கதியான எனது சுற்றுச்சூழலில் இருந்து ஏதாவது நிம்மதி கிடைக்காதா என ஏங்கி இருந்தேன்.

ஒரு கனவானுக்குள்ள தோரணையோடு எனது கையிலுள்ள புத்தகத்தை வேண்டுமென்றே கீழே நழுவவிட்டு அவளைக் கடந்து சென்றேன். நான் எதிர் பார்த்தபடியே,'' தோழரே உங்கள் புத்தகத்தைக் கீழே தவறவிட்டு விட்டீர்கள்,'' என்று அவள் என் பின்னால் வந்து கொண்டே என்னை அழைக்கும் குரல் கேட்டது.

நான் திரும்பி மெதுவாக அவளை நோக்கி நடந்தேன். பண்போடு அவளுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டேன். அவள் என்னிடம் புத்தகத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தபோது, ''புத்தகங்கள் படிப்பதில் உனக்கு ஆர்வமுண்டா?'' என்று கேட்டேன்.

ஆம் என்று தலையை ஆட்டினாள்.

இப்படியாகத் தொடங்கிய எங்களது உரையாடல், புத்தகத்திலிருந்து, எனது வாழ்க்கை, மெக்ஸிகோ நாட்டு பூகம்பம், கால்பந்தாட்டத்தில் பிரேஸிலின் தோல்வி பிரபஞ்சம், பூமி இவற்றில் முடிந்தது. பல வருஷங்களாக நான் கற்றறிந்தவற்றை எல்லாம் உரையாடலில் வெளிப்படுத்தினேன். எனது அறிவார்ந்த இந்தப்பேச்சு தூய்மையும் அப்பாவியுமான இப்பெண்ணை என்னைப்பற்றி மிகுந்த மரியாதையோடு சிந்திக்க வைத்து அவளை நிமிடத்திற்கு நிமிடம் மேலும் என் அருகில் நெருங்கிவரும்படி செய்தது.

இந்த இடத்தில் பேச்சை நிறுத்தினேன். சிலவினாடிகள் சென்றதும், நான் வாய்சாலகன் என்பதைவிட துயரத்தில் உழல்கிறவன் என்பதாக என்னை மாற்றிக் கொண்டு, எனது மகிழ்ச்சியற்ற காதல் கதையைச் சொன்னேன். நம்பிக்கை துரோகம் செய்து ஒரு பெண் என்னை ஏமாற்றியதையும், அவளது தீய ஒழுக்கத்தையும் நான் மனப்பூர்வமாக மன்னித்து அவளது வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக அமைய நான் விரும்பியதையும் அவளிடம் விளக்கமாக சொன்னேன்.

எனது சோகமயமான கடந்தகால நடப்புகளை பல்லாண்டுகளாக எனது நெஞ்சத்தில் புதைத்து வைத்துவிட்ட தாகவும், அவளது ஒளிமயமான கண்களைக் கண்ட மாத்திரத்தில் அவளிடம் அனைத்தையும் சொல்ல என்னைத் தூண்டியதாகவும் அவளிடம் தெரிவித்தேன். எனது கதையில் அவளது நெஞ்சம் இளகிவிட்டது. தடுமாறிய குரலில் அவள் எனக்கு ஆறுதல் கூறினாள். பக்கத்தில் பூத்திருந்த அழகான காட்டுமலர்களைக் காட்டியபடியே வருங்காலத்தைப் பற்றிய நம்பிக்கை யுடனிருக்குமாறு எனக்கு அறிவுரை கூறினாள்.

அமைதியாக இரவு நெருங்கி வந்தது. பெரிய நகரங்களில் இளம் பெண்களும் இளைஞர்களும் எப்படிக் காதல் புரிகின்றனர் என்பது பற்றியும் அவளுக்கு எடுத்துரைத்தேன். காலங்கனிந்து விட்டதை உணர்ந்து கொண்ட நான் லேசாக அவளது கையைத் தொட்டேன். அவள் சற்றே பயந்த போதிலும் என்னைத் தடுக்கவில்லை. காதல் தத்துவத்தை செயல்முறைப்படுத்த சரியான தருணம் என்ற உறுதியுடன் எனது மார்பை உயர்த்தி அவளைக் கெட்டியாகப் பிடித்து எனது இருகரங்களில் இறுக அடக்கிக் கொண்டேன். அவளும் சாதுவாக தனது தலையை எனது தோள்மீது சாத்திக் கொண்டாள். காலங்கடத்தாமல் அந்த மிருதுவான புல்படுக்கையில் இன்பசுகம் அனுபவித்தோம். அடுத்த நாள் அந்த நகரத்தைவிட்டுக் கிளம்பி நான் எனது மனைவி இருக்கும் ஊர் சென்றடைந்தேன்.

நடந்தவை எல்லாம் சில்லறை விஷயங்கள் என்று கருதி அவற்றை அறவே மறந்துவிட்டேன்.

அதிர்ஷ்டவசமாக வியாபார சம்பந்தமாக சென்ற வருஷமும் அந்த நகரத்திற்குச் செல்ல நேர்ந்தது. மறுபடியும் அந்நகரத்தில் அலுப்புத் தட்டியதால் புறநகரின் அந்தப் புல்வெளிக்கே சென்றேன். சென்ற உடனேயே அந்தப் பெண்ணின் உருவம் என் மனக்கண் முன்வந்து நின்றது.

சுற்று முற்றும் நோக்கியபோது முந்தைய வருஷம் போலவே புல் செழிப்பாக வளர்ந்திருப்பது தெரிந்தது. ஆனால் அந்தப் பெண்ணின் நிழல்கூட அங்கில்லை. திடீரென அங்கு ஒரு கல்லறை எழுப்பப்பட்டிருப்பதையும் அதன் பக்கத்தில் ஒரு பைன் மரக்கன்று வளர்ந்திருப்பதையும் பார்த்தேன். அதனருகில் பயபக்தியுடன் ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான்.

ஆர்வத்தோடு நான் அவனருகில் சென்றேன். எனது காலடியின் அரவம்கேட்டு, மேலேபறந்து கொண்டிருந்த பறவைகளைப் பார்த்துக் கொண்டிருந்த அவன், என் மீது பார்வையை செலுத்தினான்.

இரத்தப்புற்று நோயால் பீடிக்கப்பட்டு ஒரு பெண் இறந்துவிட்டதாகவும், அவள் இங்கு புதைக்கப்பட்டிருப்பதாகவும் கம்மிய குரலில் அந்த வாலிபன் சொன்னான்.

''அவள் என்னுடன் பள்ளியில் சேர்ந்து படித்தவள். ரகசியமாக நான் அவளைக் காதலித்து வந்தேன். இறுதியாக ஒருநாள் என்னை மணந்து கொள்ளுமாறு அவளை நான் கேட்டபோது ஏற்கெனவே அவளுக்கொரு காதலன் இருப்பதாகவும் அவள் கூறினாள். அவன் யார் என்று நான் கேட்டேன். அந்த மனிதரை ஒரு தடவைக்குமேல்தான் பார்க்கவே இல்லை என்றும் என்னிடம் சொன்னாள். அவனது முகவரி தன்னிடம் இருப்பதாகவும், ஆனால் தான் நீண்டநாள் உயிர்வாழ முடியாதென்பதால் அவனுக்குத் தெரிவிக்கவில்லை என்றும்

கூறினாள். அவனை அவள் உயிருக்குயிராக நேசித்ததாகவும் தான் அபாயகரமான வியாதியால் மரணம் அடையப் போவதை எண்ணி அவன் மனவேதனைப்படுவதைத்தான் பார்க்க விரும்பிவில்லை என்றும் மேலும் அவன் ஏற்கெனவே மிகுந்த வேதனையை அனுபவித்தவன் என்றும் ஆதியோடந்தமாக விவரித்தாள்,'' என்று அந்த வாலிபன் மேலும் தெரிவித்தான்.

நான் விளைவித்த இந்தக் கொடூரமானத் தீவினையை என்னால் எதிர் கொள்ள முடியவில்லை. தள்ளாடியபடியே எனது விடுதிக்குத் திரும்பி வந்து எனது அறையில் வெறியோடு மதுவில் என்னை மூழ்கடித்துக் கொண்டேன். ஆயினும் இதிலிருந்து என்னைத் தலை எடுக்கவொட்டாமல் அமுக்கிக் கொண்டிருக்கும் பயங்கரமான தீயக்கனவிலிருந்து என்னால் விடுபட முடியவில்லை.

卐

## 24 அவர்கள் குருடர்கள்

அவளது வீட்டுத் தெருவாசல் வரையில் அவளுக்குத் துணையாக நான் சென்றேன். வாயிலுக்கு வெளிப்புறம் ஒரே இருட்டாக இருந்ததால், அவளது கன்னத்தில் கடைசியாக ஒரு முத்தம் கொடுத்துவிட்டு, ''நீ உள்ளே போ'' என்று சொன்னேன்.

அவள் என்னை அப்பால் நகரவிடாமல் இறுக அணைத்துக் கொண்டே தனது மிருதுவான விரல்களால் எனது சட்டைப் பித்தான்களைத் திருகிக் கொண்டிருந்தாள்.

அவளை உள்ளே செல்ல அவசரப்படுத்தாமல் நானும் அவளது அணைப்பில் இருந்துவிடுவித்துக் கொள்ளாமல் இருந்தேன்.

''நீ பஸ்ஸிலிருந்து இறங்கி உன் வீட்டிற்கு, வெகுதூரம் தனியாக நடந்து செல்ல வேண்டும். ஆகவே நான் உன் வீடு வரை உனக்குத் துணையாக வருகிறேன்,'' என்று சொன்னாள்.

மீண்டும் நாங்கள் பஸ்ஸில் புறப்பட்டோம்.

எங்கள் வீட்டிற்கு நாங்கள் ஒருபோதும் ஃபங்யுவான் சந்து வழியாகச் சென்றதில்லை. அந்த சந்தில் எப்போதும் ஒரு பெரிய ஜனக்கூட்டம் மாலை நேரக்காற்றின் சுகத்தை அனுபவித்தவாறு நின்றிருக்கும். அதனால் எங்களுக்குப் பிடித்தமான பாதை ஜன சந்தடி இல்லாத அமைதியான குறுகிய ஜிக்ஸியாங் சந்துதான். அங்கு 'வீடுகள் ஒழுங்கு முறையின்றி வரிசை இல்லாமல் கட்டப்பட்டிருக்கும். சில வீடுகள் சந்துப்புறமாக நீட்டிக் கொண்டிருக்கும். சிலவீடுகள் பின்புறமாகத் தள்ளி இருக்கும். இதனால் அங்கு இருட்டான மூலை முடுக்குகள் நிறையவே இருக்கும். இந்த இருண்ட மூலைகளில், மோகப் பெருமயக்கில் நாங்கள் முத்தமிட்டுக் கொள்வோம். இந்த இருள்சூழ்ந்த ஒதுக்கமான குறுகிய சந்தை வந்தடைய, எங்கள் இதயம் படபடக்க நாங்கள் விரைந்து நடப்போம். அங்கு நாங்கள் கட்டித் தழுவியபடியே நடப்போம்.

ஃபங்யுவான் சந்திலுள்ள எனது 57வது எண் இல்லத்தை வந்தடைந்தோம்.

''உள்ளே போ,'' இந்தத் தடவை இதைச் சொல்ல வேண்டியது அவளது முறை.

''நான் எப்படி உள்ளே போவேன். நீ உன் வீட்டிற்குத் தனியாகத், திரும்பவும் நடந்து செல்ல முடியாது.''

''மீண்டும் நாம் சேர்ந்து போவதுதான் நிம்மதியாக இருக்கும்,'' என்று தனது உதடுகளைச் சுழித்தவாறு அவள் சொன்னாள்.

மீண்டும் திரும்பிக் குறுகலான அதே ஜிங்ஸியான் சந்தின் மூலை முடுக்கு வழியாகவே போய்க் கொண்டிருந்தோம்.

''சீனச் சொக்கட்டான் ஆட்டத்தில் காய்கள் அங்கும் இங்குமாக நகர்வது போல் நாம் நட்ந்து கொண்டிருக்கிறோம்.'' என்றேன்.

அணைப்பில் இருந்து என்னை லேசாக விலக்கியபடி, ''யாரோ வந்து கொண்டிருக்கிறார்கள்,'' என்றாள்.

''ஓ அவர்கள் குருடர்கள்,'' என்று நான் பதிலளித்தேன்.

2

ஆம். அவர்கள் குருடர்கள். அவர்கள் இருவரும் கை கோர்த்துக் கொண்டு நடக்கிறார்கள். அவர்களுக்கு நாற்பது வயது இருக்கலாம். அந்த மாது குள்ளமாகவும் பருமனாகவும் இருக்கிறாள். அவளது வாய் லேசாகத் திறந்தபடியும் கண்கள் மூடியபடியும் உள்ளன. அவள் புன்னகை செய்கிறாளா? இல்லை. அவள் தடம் தொட்டு நடக்கிறாள். சாலையின் நடைபாதைக் குறட்டை தன் வலது கையிலுள்ள கோலினால் தட்டிக்கொண்டே, இடது கையால் அந்த ஆளைப்பிடித்துக் கொண்டே மெதுவாக நடக்கிறாள். அந்த உயரமான மெலிந்த மனிதனுக்கு பார்வையற்ற இரண்டு கண்களும் பெரிதாக இருக்கின்றன. அவனது வலது தோளில் இரண்டு சாப்பாட்டுப் பாத்திரங்கள் உள்ள பை ஒன்று தொங்குகிறது. அவன் சந்தின் மத்தியில் நடந்து வருகிறான். அவனுக்குப் பின்னால் ஒரு சைக்கிள் வேகமாக வந்து சத்தம் கொடுக்கிறது.

அவர்கள் ஒதுங்கி, தங்கள் பாதையில் கோலால் தட்டிக் கொண்டே ஓரமாக நடந்து செல்கிறார்கள்.

3

பல்பொருள் அங்காடியில் இருந்து பலவித அளவிலான பைகளில் சாமான்களை நிரப்பிக் கொண்டு நாங்கள் திரும்பினோம். ஒருவரை ஒருவர் தழுவியவாறு ஜிங்ஸியாங் சந்தின் இருண்ட குறுகிய வழியாக நடந்தோம். கோடைகால இரவானபடியால் காற்று லேசாக வீசியது. வானத்து மீன்கள் எங்களை மர்மமாக எட்டிப் பார்த்தன. நாளை எங்கள் திருமணத்திற்குப் பின் இவற்றுக்கெல்லாம் விடை கொடுத்தாகிவிடும்.

மற்றொரு திருப்பத்தில், ''நீ, நன்றாகத்தானே இருக்கிறாய்?'' மெல்லிய குரலில் அவள் கேட்கிறாள்.

''எனக்கென்ன? நான் நன்றாகத்தானே இருக்கிறேன்.''

''பின் ஏன் அவ்வளவு தூரம் பின்னால் வருகிறாய்? என்ன யோசனையில் இருக்கிறாய்?'' என்கிறாள்.

''ஒன்று மில்லை''

''நீ ஏன் அந்தப் பக்கமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்?''

''அதோ பார். அவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்.''

''அதைப் பற்றிக் கவலைப்பட ஒன்றும் இல்லை. அவர்கள் குருடர்கள். இல்லையா?''

4

டப்...டப்...டப்..டப்

முன் போலவே இருவரும் கைகளைக் கோத்துக் கொண்டு தெருவின் வலது புறமாக மீண்டும் எங்களை நெருங்கி வந்து கொண்டிருந்தார்கள். அந்த மனிதன் சாப்பாட்டுப் பெட்டி உள்ள பையைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டிருந்தான். அவளுக்கு இடது புறமாக சாலையின் மத்தியில் நடந்து வருகிறான். தன் வலது கையில் உள்ள கோலினால் தரையைத் தட்டிக் கொண்டே அவளும் நடக்கிறாள்.

5

எங்களுக்குள் சச்சரவிட்டுக்கொள்வது அன்றாடப் பிரச்சினையாகிவிட்டது. எங்களது தீவிரமான முதற் காதலும் மகிழ்ச்சிகரமான தேனிலவும் (பழங்கதையாகி) கழிந்துவிட்டன.

''நான் இன்று கருச்சிதைவு செய்து கொண்டேன்.''

''உனக்கென்ன பைத்தியமா? என்னிடம் நீ ஒரு வார்த்தைகூட சொல்லவில்லையே, நாம் இருவரும் தம்பதிகள் இல்லையா?''

''தம்பதிகளா? உண்மைதான். இப்படிச் சொல்ல, உனக்கு தைரியமிருக்கிறது! நீ எப்போதும், நாவலிலும் எழுதுவதிலும் படிப்பதிலும் மூழ்கிவிடுகிறாய். இந்த நிலையில் ஒரு குழந்தை இருந்தால் என்ன நேரிடும் என்பது பற்றி நீ சிந்தித்துப் பார்த்ததுண்டா? நான் கருவுற்றால் என்னைக் கவனித்துக் கொள்ள உன்னால் முடியுமா?'' நான் வேலை பார்த்துவிட்டு வந்து உனக்காக சமைக்கிறேன். ஒவ்வொரு வேளை சாப்பாட்டிற்குப் பிறகும், உன் தட்டுக்களை சுத்தம் செய்கிறேன். இப்போது நீ உனது குழந்தையையும் என் வயிற்றில் சுமக்கச் சொல்கிறாய். எனக்கு இருபத்து எட்டு வயதுதான் ஆகிறது. நான் இன்னும் சந்தோஷமாக வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்கவில்லை!''

''அப்படியானால் நீ ஏன் திருமணம் செய்து கொண்டாய்?''

''நீ மட்டும் என்ன? எனக்குப்பதிலாக நீயும் உன்னுடைய நாவலையே திருமணம் செய்து கொண்டிருந்தால் நன்றாக இருந்திருக்குமே!''

சண்டைக்கு ஒரு முடிவும் வருவதாகத் தெரியவில்லை. இரவு முழுவதும் இருவரும் பேசிக் கொள்ளாமலும், ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்காமலும் படுத்துக் கிடந்தோம். நாளையதினம் எனது நாவலின் நான்காவது அத்தியாயத்தை எழுத வேண்டி இருந்தது. அவள் இரவு முழுதும் அழுதாள்.

''என்னை அப்படியே உங்களுக்கு காணிக்கையாக்கி விட்டேன்,'' என்று ஒரு சமயம் அவள் பிரகடனப்படுத்தினாள்.

''என் வாழ்நாள் முழுவதும் அன்போடு உன்னுடன் வாழ்க்கை நடத்துவேன்....'' இப்படி ஒரு சமயம் நான் அறிவித்தேன்.

இதைப்பற்றி நாங்கள் மேலும் சிந்தித்து இதை நடை முறைக்குக் கொண்டுவரவில்லை. முன்பு என்ன உறுதிமொழி எடுத்துக் கொண்டோமோ அதுவே போதுமானது. அது சரிதானே?

6

ஜிக்ஸியாங் சாலையில் எப்போதும் அவர்களை நான் சந்திக்கிறேன். இது ஏன்? அந்த சந்தின் முனையில் குருடர்களுக்கான தொழிற்சாலை ஒன்று இருப்பது எனது ஞாபகத்திற்கு வந்தது. தொழிற்சாலையில் இரண்டு ஷிஃப்ட் வேலை நடைபெறும் போல் தெரிகிறது. சில சமயம் இரவு நேரத்தில் கிழக்குநோக்கியும், பிற்பகலில் மேற்கு நோக்கியும் அவர்கள் நடந்து செல்கின்றனர். சில சமயம் நடுப்பகலில் வேலைக்குச் சென்றுவிட்டு நள்ளிரவில் திரும்பி வருகின்றனர்.

கிழக்கோ, மேற்கோ, இரவோ, பகலோ அதுபற்றி எவ்விதக் கவலையும் இன்றி கைகளைக் கோத்தபடியே சாலையின் வலது பக்கமாக சாலை விதிகளை அனுசரித்து கார்கள் செல்வதுபோல் அவர்கள் கடந்து செல்கின்றனர். சாலையின் கப்பித் தரையில் கோலால் தட்டிக் கொண்டே பெண் வழிகாட்டி நடத்திச் செல்ல சாப்பாட்டுப் பாத்திரம் உள்ள பை தோளில் தொங்க அவன் அவளது கையைப் பிடித்தபடி நடக்கிறான்.

அந்தப் பெண்ணின் வலது கால்செருப்பின் வெளிப்புறமாக ஒரு பெரிய துண்டு தோல்வைத்துத் தைக்கப்பட்டிருக்கிறது. கிழக்கு நோக்கியோ, மேற்கு நோக்கியோ சென்றாலும் செருப்பின் அந்தப் பகுதிதான் நடைபாதையின் குறட்டைத் தட்டித் தெரிந்துகொள்ள உதவுகிறது. டப்...டப்...டப்...டப்....

7

சண்டை சமாதானம்; சண்டை சமாதானம்.

''நீ இல்லாமலேயே என்னால் வாழமுடியும்.''

''நீ இல்லாமலும் என்னால் இன்னும் மேன்மையாக வாழ முடியும்.''

''விவாகரத்து செய்துவிடலாம்!''

''அப்படிச் செய்யாவிட்டால் நீயும் உருப்பட மாட்டாய்!''

உணர்வற்ற ஜடமாக நீதிமன்ற அறையை விட்டு வெளியே வந்தேன். ஜிங்ஸியாங்சந்தின் ஊடே வலது பக்கமாக நடந்து வந்தேன். அவள் இடது பக்கமாக கடந்து வந்தாள். நாங்கள் வீட்டிற்குச் சென்று எங்களுடைய சாமான்களைப் பிரித்துக் கொள்ள வேண்டி இருந்தது.

''ஏன்?''

''அவர்கள் குருடர்கள்'' நான் ஒரு தடவை இப்படிச் சொன்னேன்.

''அவர்களைப்பற்றி நாம் சிறிதும்.....கவலை கொள்ள வேண்டியதில்லை. அவர்கள் குருடர்கள். இல்லையா?'' என்று அவளும் ஒரு முறை சொன்னாள்.

8

அவர்கள் எங்களைக் கண்டு கொள்ளவும் இல்லை: எங்கள் விவகாரங்கள் பற்றி அவர்கள் எதுவும் அறிந்திருக்கமாட்டார்கள். இன்றும் அவர்கள் கைகோத்தபடியே நடந்து செல்கிறார்கள். அந்த மனிதன் உணவுப் பாத்திரம் உள்ள பையை எடுத்துக்கொண்டு நடக்கிறான். அந்தப் பெண் இன்றும் கோலால் தரையைத் தட்டியபடியே நடந்து செல்கிறாள்.

அவள் புதிய செருப்புகள் அணிந்திருக்கிறாள். அந்தச் செருப்பின் வலதுகாலின் வலப்புறம் பாதைக்குறட்டில் பட்டுப்பட்டு வெளுத்திருந்தது. பல இளந் தம்பதிகள் அவ்வழியாக நடக்கிறார்கள், அல்லது அவர்களைப் பின்தொடர்ந்து செல்கிறார்கள். ஆனால் இவர்களில் யாரும் அவர்களை ஏறிட்டும் பார்க்கவில்லை. ஏனென்றால் அவர்கள் இருவரும் குருடர்கள்.

டப்...டப்....டப்....டப்....டப்...

நகரம் தூங்கிக் கொண்டிருந்தது. ஆனாலும் இன்னும் அந்தக் கோல் சாலையின் கருங்கல் தரையைத் தட்டிக் கொண்டிருந்தது.



# 25 பட்டம்

''அம்மா வரும் சனிக்கிழமையன்று எங்கள் பள்ளியில் பட்டம் விடும் விழா நடத்தப் போகிறார்கள்.

''உம்''

''எனக்கு ஒரு பட்டம் செய்து கொடுக்கிறீர்களா?''

''உம்''

''உங்களுக்குப் பட்டம் செய்யத் தெரியுமல்லவா''

''உம்''

தாயாரை உற்றுப்பார்த்துவிட்டு மகள் பேச்சை நிறுத்திவிட்டு வெளியே வந்துவிட்டாள்.

தாயார் அவளது கணவனுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள். அவர்கள் தங்களுக்கிடையில் கடிதம் பரிமாறிக்கொண்டு நீண்ட காலமாகிவிட்டன. அவளது கணவன் குழந்தையைப் பராமரிக்கத் தகுதியற்றவனாக இருந்தபடியால் மகளின் பாதுகாப்புக்கான தொகை பெறவும் அவனிடம் தான் விவாகரத்து பெறவும் கடிதம் எழுதிக் கொண்டிருந்தாள். அவன் தனது சஞ்சிகையைப் பிரசுரிப்பதில் மட்டுமே கவனமாக இருந்தான். தனது மகளுடன் அவன் சிறிது நேரம்கூட பழகியதில்லை.

இதனால் கோபமடைந்து தனது கணவனைவிட்டுப் பிரிந்து வெளியேறி காண்டீனிலேயே உணவருந்திவிட்டு அலுவலகத்திலேயே தங்கிக் கொண்டாள். ஒவ்வொரு நாள் மாலையிலும் நாலரைமணி அளவில் கலாசாரமாளிகை அரங்கில் தனது பெண்ணின் பியானோ பயிற்சியை கவனித்துக் கொள்வாள். தனது மகளை ஒரு சங்கீத மேதையாக உருவாக்க விரும்பினாள்.

''ஷான்ஸான் தயாரா?''

அரங்கில் பியானோவின் சத்தத்தையோ அவளது மகளையோ காணாதபடியால் அவள் பொறுமை இழந்தாள்.

''நீ என்னைப் புரிந்து கொள்ளவில்லை. குப்பைக் கூடையில் என்ன ஆராய்ந்து கொண்டிருக்கிறாய்?'' என்று மகளைக் கடிந்து கொண்டே அவளது கையிலிருந்த காகிதச் சுருளைப் பிடுங்கினாள்.

கடந்த சில நாட்களாகவே மகளின் பியானோ பயிற்சி சிறிது சிறிதாக குறைந்து வந்தது.

''இன்று உனக்கு என்ன வந்தது?'' என்றாள்.

''எனது சங்கீதப் பயிற்சி நோட்டுப்புத்தகத்தை அமியின் வீட்டில் வைத்துவிட்டு அதை எடுத்து வர மறந்துபோய்விட்டேன்.''

''உடனே போய் அதை எடுத்து வந்து அரை மணி நேரம் அதிகமாகப் பயிற்சி செய்.''

ஷான்ஸன் திரும்பி வர நேரமாகிவிட்டது. கையில் இழைத்த மூங்கில் பிளாச்சியுடன் வந்தாள்.

''ஏன் இவ்வளவு நேரம்?'' என்றாள் அம்மா. மகள் பதில் சொல்லவில்லை. அவளது விரல்கள் பியானோவில் நடனமாட ஆரம்பித்தன.

'உண்மையிலேயே அமி, அதிர்ஷ்டசாலி.'' என்றாள் சற்றுநேரம் சென்று ஷான்ஸன்.

''சீக்கிரம் இன்று எட்டாவது பாடம்வரை பயிற்சி செய்ய வேண்டும்'' என்றாள் தாயார்.

''அமியின் அப்பா மூங்கில் பிளாச்சுகளை மெலிதாக இழைத்துக் கொடுக்கிறார். அவனது அம்மா அதைக் கொண்டு அவனுக்குப் பெரிய பறவை உருவத்தில் பட்டம் செய்து கொடுக்கிறார்,'' என்றாள் ஷான்ஸன்.

''எப்போதும் பட்டம்தானா பேச்சு. ராகத்தைத் த்வறாக வாசிக்கிறாய்.''

''அமிதாகூட தானாகவே பட்டம் செய்யக் கற்றுக் கொள்கிறான். ஆனாலும் அவன் அடிக்கடி மூங்கில் சிம்புகளை உடைத்து வீணாக்கிவிடுகிறான். இதற்காக அவனது அப்பாவோ அம்மாவோ அவனைக் கோபித்துக் கொள்வதில்லை.''

''ஏண்டி உன்புத்தி இப்படி அலைகிறது? நீ இப்படி நடந்து கொண்டால் எனக்கு மஹா கோபம் வரும்.''

இரவு சாப்பாட்டுக்குப்பிறகு அமிவந்த போது ஷான்ஸன் தோட்டத்தில் பட்டம் செய்வதில் முனைந்திருந்தான்.

''அது என்ன பட்டம்?'' என்றான் அமி.

''நீ ஒன்றும் ஜம்பம் அடித்துக் கொள்ள வேண்டாம். உனக்கு உன் அம்மா பட்டம் செய்து கொடுத்துவிடுகிறார்கள்.'' என்றாள்.

''வரும் வழியில் உன் அப்பாவை நான் பார்த்தேன்.''

''எங்கே?''

தலையை ஆட்டிக்கொண்டே ஷான்ஸன் பின்தொடர வெளியே வந்தான் அமி.

ஒன்பது மணிக்குப்பிறகு கையில் வண்ணத்துப்பூச்சி உருவில் ஒரு பட்டத்தை எடுத்துக்கொண்டு ஷான்ஸன் வீடு திரும்பினாள். சுவரில் பட்டத்தைத் தொங்கவிட்டுவிட்டு அதையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அம்மா, நான் இன்னும் சிறிது நேரம் பியானோவில் வாசிக்கலாமா?''

''நீ இன்னும் படுக்கப் போகவில்லையா?''

''நான் இன்று மிக்க மகிழ்ச்சியோடிருப்பதாக உணர்கிறேன் அம்மா.'' என்றாள் ஷான்ஸன்.



# 26 காதலிக்காக...

''ஆக நாம் மீண்டும் சந்திக்கிறோம்!'' தாடிக்கார பலசாலியான மனிதன் ஒருவன் கண்களில் தீப்பொறிமின்ன யிங்சுன் ஹோட்டலின் ஒரு மூலையில் கையில் ஒரு கோப்பை காபியுடன் அமர்ந்திருந்தான். பார்த்த முகம்போல் தோன்றியது. ஆனால் யாரென்று என்னால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

''ஆம் நாம் மீண்டும் சந்திக்கிறோம்'' என்று புன்னகை செய்தவாறு நிர்பந்தமாக சொல்லி வைத்தேன். ஹோட்டலின் நடுவில் ஒரு மேஜை அருகில் அமர்ந்து காபி கொண்டுவர சொன்னேன். அவனது இமை கொட்டாத கண்கள் என்மீது குத்தி நின்றன. தன்னுடன் நான் சேர்ந்து அமரவேண்டுமென்று அவன் விரும்புகிறான் என்பதாக திடீரென எனக்குப்பட்டது. எனக்குக் காபிவந்தது. அதை உறிஞ்சிக்கொண்டே மாலை செய்தித்தாளைப் படிக்க ஆரம்பித்தேன்.

அவன் என் மேஜை அருகில் வந்தான். ''நீ ஏன் என் பக்கம் வந்து அமரவில்லை. நான் உன்னைக் கடித்துவிடுவேன் என்று நினைக்கிறாயா?'' என்று கண்கள் அகலவிழித்தபடியே நீண்ட பெருமூச்சுவிட்டான். அந்த சூடான மூச்சுக்காற்று என் முகத்தைத் தடவியது.

அவன் யார் என்பதை அடையாளம் கண்டு கொள்ளாதவரை அவனிடம் எதுவும் பேசுவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டேன். கடந்த சமீப சில வருஷங்களில் நான் பார்க்காத எனது நண்பர்களை எல்லாம் ஞாபகத்திற்குக் கொண்டுவந்து யோசித்தேன். ஆயினும் இவனது முகம் எனது நினைவிற்கு வரவில்லை. சொந்த முறையில் எனக்கு விரோதமாக ஏதாவது இருக்குமோ? அப்படியும் இருப்பதற்கு காரணமில்லை. மற்றவர்களுடன் நான் எவ்விதமான வாக்கு வாதமும் வைத்துக்

கொள்வதில்லை. ஒருக்கால் மனக்கோளாறு உள்ளவனாக இருப்பானோ? அல்லது வேறு ஏதாவது நோக்கம் இருக்குமா? இவை எல்லாம் இல்லை எனத் தெளிவானபடியால் இவனை நான் முன்பு பார்த்திருக்கிறேனா இல்லையா என்பதை என்னால் உறுதி செய்ய இயலவில்லை.

''நீ பயப்படுகிறாய் இல்லையா? நான் உன்னைத் தாக்கவிரும்பி இருந்தால் அதை வெகுநாட்களுக்கு முன்பே செய்திருக்க முடியும்''

''என்னை நிர்பந்தம் செய்கிறாயா? இந்த நாட்டில் சட்ட திட்டங்கள் உள்ளது உனக்குத் தெரியும். மக்களுக்கு ஜனநாயக உரிமை இருக்கிறது. முட்டாள்தனமாகப் பேசாதே'' என்று சொல்லிக்கொண்டே வெளியே செல்ல எழுந்தேன்.

அவன் வேகமாக என் சட்டையைப் பிடித்து இழுத்து மீண்டும் என்னைத் தள்ளி நாற்காலியில் உட்கார வைத்தான். நான் சுற்றிலும் பார்த்தேன் அங்கு ஒரு நீர்த்தொட்டியின் பக்கத்தில் உபசரணை செய்யும் பெண் அரைத்தூக்கத்தில் இருந்தாள். அவன் மேலும் மூர்க்கத்தனமாக எதுவும் செய்துவிடுவானோ என்ற பயத்தால் நான் சத்தம் போடத் துணியவில்லை.

நான் நாற்காலியில் அமர்ந்ததும், ''ஏய் நீ என்னை மறந்துவிட்டாய்'' என்றான். நான் உறுதியாகத் தலையை ஆட்டினேன்.

''அப்படியானால்...நாம் மீண்டும் சேர்ந்திருக்க வேண்டும். நீ இவ்வளவு தூரம் மறதியாக இருந்திருக்கக் கூடாது.''

''உனக்கு என்னதான் வேண்டும்?'' நான் எனது கைக் கடிகாரத்தைக் ஆட்டிக்காட்டினேன்.

''இது அறுபது யுவான் பெறுமானமுள்ளது. என்னிடம் உள்ளதெல்லாம் இதுதான்.''என்றேன்.

அவன் அலட்சியமாகப் பார்த்தான். நான் இம்மாதிரி கொடூரமான பார்வையை சினிமாவில்தான் பார்த்திருக்கிறேன்.

என் பின்புறமாக உள்ள நாற்காலியை அடைந்தேன்.

''ஒருக்கால் அவன் என்னை.....''

''நான் யார் என்பது உனக்கு ஞாபகம் இல்லை என்பது உண்மைதானா?'' அவனது இருகண்களும் இரு கத்திகள் போன்று தோற்றமளித்தன.

''ஆம் நிச்சயமாக சொல்கிறேன். எனக்கு ஞாபகமில்லை''

''நான் உன் மனைவியின் சிநேகிதனாக இருந்தவன். நானும் அவளும் மூன்று மாதங்களே பழகினோம். அவள் மீது நான் கொண்டிருந்த நம்பிக்கை எல்லாம் வெறும் கனவாகிவிட்டன. நீ எவ்வித மனசாட்சியுமின்றி என்னிடமிருந்து அவளைப் பறித்துவிட்டாய். நீயோ படித்தவன். நான் படிக்காதவன். உன்னுடைய கம்பீரமான தோற்றத்தைக் கண்டுதான் இந்தப் பெண்கள் மயங்கிவிடுகிறார்கள். அவள் உன்னைக் காதலித்தது எனக்குத் தெரியும். ஆனால் நான் விரும்பியதெல்லாம் அவள் மகிழ்ச்சியாக இருக்க வேண்டுமென்பதுதான். ஆனால் நான் இன்றும் அவளை நேசிக்கிறேன். நான் நேசிக்கும் ஒன்றிலிருந்து சுலப்மாக என்னைப் பிரித்துக் கொள்ள மாட்டேன்.''

''உனக்கு என்னதான் வேண்டும்?''

''உனக்கு புத்திகொடுக்க வேண்டுமென விரும்புகிறேன்.''

இதுதான் எனது இறுதி என்றும் அவன் என்னைக் குத்திக் கொன்றுவிடுவான் என்றும் எண்ணினேன். எங்கோ ஒரு மூலையிலுள்ள ஓர் ஹோட்டலில் எதுவும் நடக்கலாம். அந்த ஒரே உபசரணைப் பெண்ணும் மறைந்துவிட்டாள். நான் கதவைத் தாழிடப் போனபோது அவன் வேகமாக என்னைக் கீழே தள்ளினான். என்னால் எழும்ப முடியவில்லை. கொலைவெறி கொண்ட அவனது முகம் மேலும் இறுகியது.

''ஆனால் உனக்கு புத்தி புகட்ட இது சரியான தருணமல்ல. ஏ மிருகமே இதை மாத்திரம் சொல்கிறேன். கேள். 'இப்பொழுதுதான் உன் மனைவியை ரயிலடியில் சந்தித்தேன். அவள் அழுது கொண்டிருந்தாள். தற்கொலை செய்து கொள்வது பற்றிய சிந்தனையில் இருக்கிறாள். அவள் வெறித்தனமாக உன்னை நேசிக்கிறாள். ஆனால் நீயோ உனது சுதந்திரம் என்று சொல்லிக்கொண்டு வேறு எவளுடனோ தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறாய். அவள் உயிரை மாய்த்துக் கொண்டால் நீதியை நிலைநாட்ட இந்த உலகில் மனிதர்கள் இருக்கிறார்கள் என்பதை மட்டும் நீ ஒருபோதும் மறந்துவிடாதே.'' என்றான்.

அவன் இறுதியாக ஒரு வெற்றிப்பார்வையை என்மீது செலுத்திவிட்டு வெளியே சென்றுவிட்டான்.

சுயநிந்தனை என்னை வீழ்த்த தனியனாக நான் அமர்ந்திருந்தேன்.



## 27 தணிக்கையான செய்தி

ஞாயிற்றுக்கிழமைகளில் சுங்குவாங்கடை வீதியில் கூட்டம் நிறைந்து வழியும். ஒரே இரைச்சலாகவும்? சுறுசுறுப்பாகவும் இருக்கும். எனது பள்ளித் தோழன் ஜியாங்கும் நானும் எப்படியோ வழி பண்ணிக்கொண்டு உள்ளே சென்றுவிட்டோம்.

''ஹலோ தயவு செய்து எனக்கு சோப் கொடுங்கள், என்று கடைகாராரிடம் கேட்டேன்.

''எத்தனை கட்டிகள்?''

''உம்....பத்து கட்டிகள்'' என் அம்மா இரண்டு சோப் வாங்கிவரும்படியாகத்தான் சொன்னார். ஆனால் நான்தான் மீண்டும் கூட்டத்தில் இடிபடுவதைத் தவிர்க்க பத்து கட்டிகளாக வாங்கினேன்.

''சோப் விலை உயர்ந்துவிடுமென்று நீ பயப்படுகிறாயா?'' என்று ஜாங் வேடிக்கையாகக் கேட்டான். இருவரும் வேடிக்கையாகப் பேசியபடியே நடந்து சென்றோம்,'' செய்தித் தணிக்கையினால் நாளைக்கு சோப்பின் விலை.......'' எங்கள் பின்புறமாக வந்த பருமனான ஒரு பெண்ணின் அலறலால் என்பேச்சு தடைப்பட்டது. சத்தமிட்டுக்கொண்டே அந்தப் பெண் அவசரமாகக் கடைவீதிப் பக்கம் விரைந்து சென்று மறைந்தாள்.

வழியில் ஒரு கடையில் நின்று கொறிப்பதற்காக எதோ வாங்கிக் கொண்டு வீடு திரும்பினோம். நாங்கள் கொஞ்ச தூரம் வந்ததும் இந்த சோப்புகளை எங்கே வாங்கினீர்கள் என்று சொல்ல முடியுமா?'' என்று ஒரு வயோதிகர் கேட்டார்.

''சுங்குவாங்கடை வீதியில் வாங்கினேன்.'' என்றேன்.

அவர் அங்கிருந்து திரும்புவதற்குள் நாகரிகயாக உடையணிந்திருந்த இரண்டு பெண்கள் சாதாரணமாக, ''எங்கே விற்பதாகச் சொன்னீர்கள்?'' என்று வினவினர்.

இந்த பத்து சோப்புகளும் வழி எங்கும் எல்லோரது கவனத்தையும் ஈர்த்தது. ஜனங்கள் எங்களை நிறுத்தி சோப் கிடைக்கும் இடம்பற்றியே விசாரித்தனர். சிலர் எங்களைச் சுட்டிக்காட்டி ஏதேதோ பேசிக்கொண்டார்கள். இதெல்லாம் என்னவென்று புரியாமல் நானும் ஜியாங்கும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம். சாலைகள் சந்திக்குமிடத்தில் ஒரு சிறு கடையின் முன் நீண்ட வரிசையில் ஜனங்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் கூடைகள், பின்னல் கைபெட்டிகளையும் கூடவைத்திருந்தனர். பிரதான வீதியை அடைத்துக்கொண்டு பாம்பு ஊர்வது போல வளைந்து நெளிந்து நின்றனர். பற்றாக்குறையாக இருக்கும் சில பொருள்களை வாங்க நிற்கிறார்கள் என்று பழைய அனுபவம் எனக்கு உணர்த்தியது. இதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் எங்களைத்தூண்டியது. வரிசையில் நின்ற ஒருவரிடம் ''என்ன வாங்க நிற்கிறீர்கள்'' என்று கேட்டேன்.

''நீங்கள்தான் வாங்கிக் கையில் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அப்புறம் ஏன் என்னைக் கேட்கிறீர்கள்?'' என்றார்.

அவரது பதில் வேடிக்கையாகவும் எங்களை ஆத்திரமூட்டுவதாகவுமிருந்தது. நான் எனது தோள்களை குலுக்கியபடி வேறு யாரையாவது கேட்கலாமென்று நகர்ந்தபோது எனது சட்டையைப்பிடித்து இழுத்து ஜியாங், நாம் போகலாம் வா. அவர்கள் பொறுமை இழந்து நிற்கிறார்கள். அதனால் கோபப்படுகிறார்கள்'' என்றான்.

மீண்டும் நாங்கள் சுங்குவாங்கடை வீதி வழியாகச் சென்றபோது கடைகளில், ''சோப்புகள் விற்பனையாகிவிட்டன'' என்று எழுதப்பட்ட அட்டைகள் தொங்கியதைக்கண்டு ஆச்சரியம் அடைந்தோம். சிறிது நேரத்திற்கு முன்பு மலைபோல் குவிந்து கிடந்த சோப்புகள் ஏன் இப்போது இல்லாமல் போய்விட்டன என்று எங்களுக்கு விளங்கவில்லை.

நாங்கள் வீட்டிற்கு வந்ததும் என் தாயார் முகம் சுளித்தபடி எங்களைப் பார்த்து, ''ஜனங்கள் பெட்டி பெட்டியாக சோப்புகளை வாங்கி வருகிறார்கள். நீ என்னவென்றால் இரண்டு சோப்பு வாங்கி வந்திருக்கிறாய். உனக்கு கொஞ்சம் கூட நடப்பு நிலவரம் தெரியவில்லை'' என்றார்.

''நீங்கள் சொன்னதைவிட எட்டு சோப்புகள் அதிகமாக வாங்கி வந்திருக்கிறேன்.'' என்று அமைதியாகச் சொன்னேன். ''நாளைக்கு சோப்புகளின் விலை ஏறப்போவதை நீ கேள்விப்படவில்லையா?''

''யார் சொன்னது?''

''எல்லோரும்தான் சொல்கிறார்கள். தணிக்கை செய்யப்பட்ட செய்தியில் அப்படி இருக்கிறதாம்.'' என்று என் தாயார் ரகசியமாக உறுதியோடு சொன்னார். சொல்லும்போது குறிப்பாக 'தணிக்கை

செய்யப்பட்ட' என்ற வார்த்தைக்கு மிக அழுத்தம் கொடுத்து உச்சரித்தார்.

அதே சமயம் எங்கள் கதவு கிரீச்சென்ற ஓசையுடன் திறந்து கொண்டது. உயர் இரத்த அழுத்தத்தால் அவதிப்படும் எங்கள் அடுத்தவீட்டு அம்மாள் லீஜ ஒரு பெட்டி நிறைய சோப்புகளுடன் உள்ளே வந்து ''நீ சீக்கிரம் போ. பல கடைகளில் சோப்புகள் தீர்ந்துவிட்டன. வெளியிலுள்ள சில சிறு கடைகளில்தான் இருக்கின்றன. சீக்கிரம் சென்று வாங்கி வந்து விடு'' என்று மூச்சுவிடக்கூட நேரமில்லாமல் சொல்லி முடித்தார்.

இது உண்மையாக இருக்குமா என்று மிகுந்த ஆச்சரியத்தோடு ஜியாங்கை கேட்டேன்.

''உடனே நான் இதை எங்கள் வீட்டிற்குச் சொல்லப் போகிறேன்.'' என்று சொல்லிக் கொண்டே வெளியே ஓடினான்.

இருண்ட பல நாட்களுக்குப் பிறகு வானம் வெளிச்சம் காட்டியது. நானும் ஜாங்கும் தெரு வழியாக நடந்து சென்று கொண்டிருக்கும்போது முகத்தில் விசனக் குறியுடன் ஒரு நீளமான மூங்கில் தட்டியில் நிறைய சோப்புகளை ஒரு பெண் உலர்த்திக் கொண்டிருப்பதைக் கண்டோம்.



## 28 அடையாளச் சின்னம்

தொழிற்சாலை டைரக்டர் ஷூ மோட்டார் சைக்கிளிலிருந்து தொழிற்சாலை வாசலில் இறங்கியதும் தொழிற்சாலை வாசலில் கூடி இருந்த கும்பலைப் பார்த்து, ''என்ன விவகாரம்?'' என்று கேட்டார். வாயிற்படி கம்பிக் கதவைக் காட்டியபடியே, ''இந்த வாயில் காக்கும் தெய்வம் மீண்டும் தனது அதிகாரத்தைக் காட்டுகிறது!'' என்று யாரோ ஒருவன் சொன்னான். கெடுபிடியான

வாயிற் காவலன் ஜாங்கைப் பற்றி ஷூ நன்கு அறிந்தவர்தான். ஆனால் ஜாங் தொழிலாளர்களை ஏன் இன்று வெளியே நிற்க வைத்துவிட்டான்.? இதை அவனிடம் கேட்க நினைத்தபோது தொழிலாளர்கள் அடையாளச் சின்னம் அணிந்து வரவேண்டுமென்றுதான் பிறப்பித்த புதிய உத்தரவு இன்று அமுலுக்கு வருவது அவரது ஞாபகத்திற்கு வந்தது. தனது ஞாபகமறதியை எண்ணி வருந்தி தன் தலையைத் தடவிக் கொண்டார். கூட்டத்தின் பக்கமாகத் திரும்பி நம்பிக்கையற்ற குரலில் இதுதான் உத்தரவு: ''அடையாளச் சின்னம் இல்லை என்றால் யாரும் உள்ளே நுழைய முடியாது.'' என்று சொன்னார்.

எல்லோரும் அப்பால் சென்றதைப் பார்த்தவாறே ஷூ வாயிற்கதவுப் பக்கமாகச் சென்றார். ஜாங்கை நெருங்கி அவனது தோளைத் தட்டிக் கொடுத்தபடியே, ''சில சமயங்களில் நீ காவல் தெய்வமாகவே நடந்து கொள்கிறாய்'' என்றார்.

''டைரக்டர் அவர்களே அப்படியா?'' என்று சொல்லி ஜாங் உறுதியான பார்வையுடன் கையை நீட்டி ஷூவைத் தடுத்து நிறுத்தி, ''உங்கள் அடையாளச் சின்னத்தை நான் பார்க்கலாமா?'' என்று கேட்டான்.

ஷூ அடையாளச் சின்னம் அணிந்து வராததை உணர்ந்தார். ''என்ன மறதி நான் வீட்டில் வைத்துவிட்டு வந்துவிட்டேன்.'' என்று தனது கைக் கடிகாரத்தைப் பார்த்தபடியே சமாதானமான குரலில் சொன்னார். எனது ஞாபக சக்தி எவ்வளவு மோசமானது. இதற்குத் தண்டனையாக நான் மீண்டும் வீட்டுக்குச் சென்று சின்னத்தை எடுத்து வரவேண்டியதுதான். ஆனால் இப்போது நான் அதிகாரிகள் கூட்டம் ஒன்றில் கலந்து கொள்ள வேண்டியுள்ளது. நாளையிலிருந்து அடையாளச் சின்னத்தை மறக்காமல் எடுத்து வருவேன்.''

''நீங்கள் எப்போதும் கூட்டம் நடத்திக் கொண்டுதானே இருக்கிறீர்கள். இதற்கு அதற்கு என்று சொல்லி அடிக்கடி

உத்தரவிட்டுக் கொண்டும் இருக்கிறீர்கள். ஆனால் அவற்றை அமுல்படுத்தியது கிடையாது. ஆனால் இப்போதுதான் நீங்கள் உண்மையில் நடைமுறைக்கு கொண்டு வந்திருக்கிறீர்கள்.''

இந்தக் கறாரான வார்த்தைகளால் பாதிக்கப்பட்ட ஷூ ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராய் கம்பிக் கதவுக்கு வெளிப்புறமாக நின்றார்.



# 29 நெடுங்கதை

உங்களது நிதிநிலை அறிக்கையை ஆராய்ந்த பிறகு 'இதர நிதிச்சுமைகள்' என்ற தலைப்பில் நீங்கள் பதிந்துள்ள 15 யுவான் பற்றி எங்களுக்கு ஒன்றும் தெளிவாகவில்லை.

''அது ஷாங்பான் நடுநிலைப் பள்ளியில் பணிபுரியும் எனது இளைய சகோதரிக்குக் கொடுத்தது. இதுபற்றி உங்களுக்கு ஏதேனும் சந்தேகமிருந்தால் மாதா மாதம் அதற்காகப் பெறப்பட்ட ரசீதுகளைக் காட்டுகிறேன்.

தவறாக எடுத்துக் கொள்ள வேண்டாம். நீங்கள் பணம் அனுப்பியதை நாங்கள் நம்பவில்லை என்பதல்ல பிரச்சினை. ஆனால் எதற்காக அது அனுப்பப்பட்டுள்ளது என்பதுதான்.

''ஏன்? அவள் எனது தங்கை என்பது உங்களுக்குத் தெரியும். ஏழுவருஷங்கள் நான் குறைந்த வருமானத்தில் குடும்பம் நடத்த முடியாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தபோது, மீண்டும் நான் குடி அமர்த்தப்படும் வரையில் தவறாது மாதாமாதம் என் குடும்பச் செலவுக்காக 15 யுவான் அனுப்பிக் கொண்டிருந்தாள். சாதகமற்ற அரசியல் சூழ்நிலையில் நான் வைக்கப்பட்டிருந்ததால் அவள் பட்டம் பெற்ற பிறகு மலைப் பிரதேசத்தில் 15 வருடம் வசிக்க நிர்பந்திக்கப்பட்டாள். இப்போது அவளுக்கு உதவி செய்வது என் முறையாகிறது.''

உமது தங்கைக்கும் அவளது கணவருக்கும் ஒரே குழந்தைதான். மேலும் கிராமப்புறங்களில் வாழ்க்கைச் செலவும் மிகவும் குறைவுதானே. உண்மையில் உதவிக்காக அவர்கள் யாரையும் சார்ந்திருக்க வேண்டியதில்லையே.

''இல்லை. ஆனால் இன்ஷான் மாவட்டத்திலுள்ள எனது மைத்துனரின் சொந்த ஊருக்கு மாதம் 15 யுவான் அவர்கள் அனுப்பி வருகிறார்கள்.''

உமது மைத்துனர் அவரது பெற்றோர்களுக்கு உதவி செய்ய வேண்டியுள்ளதா?

''இல்லை, அவர்களது பெற்றோர்கள் எப்போதோ காலமாகிவிட்டார்கள்.''

அப்படியானால் அவர்களுக்காகப் பணம் எங்கு அனுப்பப்பட்டது?

''எனது மைத்துனர் ராணுவத்தில் சேவை புரிந்து வந்தபோது அவருடன் கூடவே சேவை புரிந்து வந்த லௌயுவான்கையின் குடும்பத்துக்குத்தான்.''

''சீன அப்போது லௌ போதிய சம்பளம் பெறவில்லையா? வியட்நாம் எல்லைப் போரில் லௌ மரணமடைந்துவிட்டார்.''

''போரில் மரணம் எய்திய வீரர்களின் குடும்பத்திற்கு உள்ளாட்சி மன்றங்கள் பராமரிப்புக்காக பணம் கொடுக்குமே.''

''ஆம், அவர்கள் கவனித்துக் கொண்டார்கள். ஆனால் லௌவின் தந்தை அவரது மகனின் படைப்பிரிவு தங்கி இருந்த ஜியாங்யாங் என்ற இடத்துக்கு ஒவ்வொரு மாதமும் 15 யுவான் அனுப்பிக் கொண்டிருந்தார்.''

குறிப்பாக யாருக்கு?

''தான் இறப்பதற்கு முன் அவர் காப்பாற்றிய ஒரு குருடான கிழவிக்கு மாதம் தவறாமல் லௌ அனுப்பிக் கொண்டிருந்தார்.

லௌ இறந்த பிறகு அவரது வேண்டுகோளுக்கிணங்க அவரது தந்தை அந்தக் கிழவிக்குத் தொடர்ந்து மாதம் 15 யுவான் அனுப்பிக் கொண்டிருந்தார்.''

''ஆக இது தான் கதை. இது மிகவும் சிக்கலாகத் தோன்றுகிறதே. முதலில் இந்தத் தொகை தொடர் ஓட்டம் போல் உங்களிடமிருந்து உங்கள் தங்கைக்கு, பின் உமது மைத்துனரிடமிருந்து இன்ஷான் மாவட்டத்திற்கு பிறகு இறுதியாக ஜியாங் யாங் போய் சேர்கிறது. நிச்சயம் நீங்கள் சுலபமான ஒரு வழியைக் கடைப்பிடித்திருக்கலாம். ஜியாங் யாங்குக்கே நீங்களே நேரடியாகப் பணத்தை அனுப்பி இருந்தால் உங்கள் உழைப்பையும் நேரத்தையும் தபால் செலவையும் தவிர்த்திருக்கலாம்.''

''ஆம். அப்படியே செய்திருக்கலாம். அதுவும் உண்மைதான். ஆனால் வாழ்க்கை என்பது வெறும் 'கணக்கு அல்லவே. மேலும் உணர்ச்சிகள் தாக்கத்தைப் பின்பற்றுவதில்லை.''



# 30 பதவி ஓய்வுக்கு முன்

தான் பதவியிலிருந்து ஓய்வு பெறப்போகும் திட்டத்தை வேய் தன் குடும்பத்தாரிடம் சொல்லியபோது வேலை தேடிக் கொண்டிருக்கும் அவரது மகள் இதைக் கேட்ட மாத்திரத்தில் கண்ணீர்விடும் அளவுக்கு மனம் கலங்கிப் போனாள். அவளுக்கு வேலை கிடைக்கச் செய்வதில் அவளது தந்தையின் பதவி மிகவும் மதிப்புள்ளதாகவும் பயனுள்ளதாகவுமிருக்கும்.

மகளின் சார்பாக அவளது தாயார் குறுக்கிட்டுப் பேசினாள். ''நீங்கள் பதவியிலிருந்து ஓய்வு பெறுவதைக் கொஞ்ச நாள் தள்ளி வையுங்கள். இல்லாவிட்டால் நம் பெண்ணுக்கு வேலையும் குடியிருப்பும் தேடிக்கொடுக்க யாரால் முடியும்?''

இந்த நியாயமானவாதம் வென்றது. வேய் சம்மதித்தார். ஆனால் ஒரு நிபந்தனை விதித்தார். அவர் என்ன ஏற்பாடு செய்தாலும் அதற்கு எல்லோரும் கட்டுப்பட வேண்டும் என்பதுதான்.

இதன் பிறகு வெகு சீக்கிரத்திலேயே நீண்டகால உபயோகத்திற்கென்று அவருக்கு உபரியாக ஒரு பெரிய அறை ஒதுக்கப்பட்டது. இதைக் கொண்டாடுவதற்காக ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலை தேநீர் விருந்து ஏற்பாடு செய்து அதில் கலந்து கொள்ள தனது முக்கிய நண்பர்களை அழைத்தார்.

அன்று மாலை நிறைய விருந்தினர்கள் வேயின் வீட்டில் கூடிவிட்டனர். புதிய அறை வெள்ளை அடிக்கப்பட்டு மின்விளக்கொளியால் பிரகாசமாகக் காட்சியளித்தது. மேஜை நாற்காலிகள் ஒழுங்காக அமர்த்தப்பட்டிருந்தன. எல்லோரும் வந்து சேர்ந்ததும் அவர்களை வேய் வரவேற்றுப் பேசினார். ''உங்கள் அனைவரின் வருகைக்காக எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.'' –

பிறகு தொழில் தொடங்குவதற்கான அரசு ஆணை அடங்கிய காகிதத்தை சுவரில் தொங்கவிட்டார். பிறகு அதை சுட்டிக்காட்டியபடியே தனது மகள் புதிதாக குழந்தைகள் பள்ளி ஒன்று தொடங்கப்போவதை மகிழ்ச்சியுடன் அறிவித்தபோது அங்கு வந்திருந்த அனைவரும் அந்த அரசாங்க உத்தரவைச் சுற்றி நின்று படிக்க ஆரம்பித்தனர்.



# 31 கண்ணாடி

அந்த அம்மையார் தனது எழுபதாவது பிறந்த நாளன்று தனது உதடுகளில் புன்னகை தவழ மனநிறைவுடன் மரணத்தைத் தழுவினார். அவருக்கு மக்கட்பேறு வாய்க்கவில்லை. வெகு தொலைவிலிருந்து வந்து சேர்ந்த அவரது உறவினர்களால் தான்

அவரது இறுதிச் சடங்குகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று. தனது சொத்துக்களுடன் விந்தையான ஒரு உயிலையும் மற்றும் கண்ணாடி ஒன்றையும் விட்டுச் சென்றிருந்தார். தன்கையில் அந்தக் கண்ணாடியை வைத்தபடியே தன் உடல் அடக்கம் செய்யப்பட வேண்டும் என்று அந்த உயிலில் குறிப்பிடப்பட்டிருந்தது. இதற்கான காரணங்களைக் கீழ்க்காணும் கதை விளக்கும்:

அவரது வாழ்க்கை உண்மையில் மிகவும் சிரமமானதாகத்தான் இருந்தது. அவரது கணவன் கொடுந்துன்பம் தாளாது இறந்து போனார். வியாதியாலும் வறுமையாலும் பெருந்துயருடன் இருண்ட அறையில் ஆட்டங் கண்ட ஒரு கட்டிலில்தான் அவர் படுத்துக் கிடந்தார். சரியாகச் சாப்பிடுவதும் இல்லை. இந்தப் பலவீனமான நிலைமையில் அவருக்கு ஒரே ஒரு எண்ணம்தான் மனதிலிருந்தது. வெறுக்கத்தக்க இந்த உலகத்தைவிட்டே ஒழிய வேண்டும் என்பதுதான் அது.

ஒருநாள் காலை கண் விழித்த போது எதிர்புறம் உள்ள சுவரில் வெளிச்சம் பரவுவதைக் கண்டார். அந்த அறையைச் சூரிய ஒளி பிரகாசமாக்கியது. மேற்கு நோக்கி உள்ள இந்த வீட்டில் சூரிய ஒளி எப்படி நுழைய முடியும்? வெளிச்சம் எங்கிருந்து வருகிறது என்பதை அறிய ஜன்னல் வழியாகப் பார்த்தார். திடீரென எதிர் வீட்டிலிருந்து பந்துபோன்ற ஒளிப்பிழம்பு தோன்றுவதைக் கண்டார். ஒரு சிறுவன் தன் கையில் ஒரு கண்ணாடியுடன் ஜன்னலில் சாய்ந்தபடி நின்றிருந்தான். அந்தக் கண்ணாடி காலைக் கதிரவனின் ஒளியை வாங்கி கிழவியின் அறைக்குள் பரப்பியது.

வானம் மப்பும் மந்தாரமுமாக இல்லாத ஒவ்வொரு நாளும் இந்த வெளிச்சம் இருண்ட அவரது அறையை ஒளிமயமாக்கி அவரது உள்ளத்திலும் ஊடுருவியது. இப்போதெல்லாம் அந்த மூதாட்டி மரணத்தை எதிர்நோக்கி படுக்கையில் அடைந்து கிடப்பதில்லை. பல மாதங்களாகவே இப்படி வரும் இந்த ஒளியினால்தான் அவர் தன் துயரத்தை மறந்து மகிழ்ச்சியுடன்

இருந்தார். ஆனால் திடீரென ஒருநாள் வெளிச்சம் வருவது நின்றுவிட்டது.

ஜன்னல் அருகில் வந்து நின்று எதிர்வீட்டை நோக்கினார். அங்குக் கண்ணாடியுடன் அந்தப் பையன் இல்லாதது தெரிய வந்தது. பக்கத்து வீட்டில் உள்ளவர்களை விசாரித்ததில் உடல் ஊனமான ஒரு பையன் தினமும் ஜன்னலில் அமர்ந்து கண்ணாடியை கையில் வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தான் என்பதும், நேற்றைய தினம் அந்தப் பையனின் கையிலிருந்த அந்தக் கண்ணாடி கீழே விழுந்து உடைந்துவிட்டது என்பதும் தெரியவந்தது. அந்தக் கண்ணாடி எங்கே விழுந்துகிடக்கிறது என்பதைக் காண அந்தப் பையன் எட்டிப் பார்த்தபோது அவனும் கைப்பிடி தவறி கீழே விழுந்து இறந்துவிட்டான். இந்த செய்தியைக் கேட்ட அந்த அம்மையார் ஆறாத்துயரம் அடைந்தார்.

அந்தச் சிறுவனது ஞாபகார்த்தமாகத்தான் அவர் ஒரு சிறிய கண்ணாடியைத் தன்னிடம் வைத்துக் கொண்டிருந்தார்.

அவர் இப்போது இறந்து போனார். இந்தக் கண்ணாடியை மேல் உலகத்திலுள்ள அந்த வட்ட வடிவ முகமுள்ள பையனைப் பார்த்து அதை அவனிடம் சேர்ப்பிக்கத் தன்னுடன் அதை எடுத்துச் செல்கிறார்.



## 32 வருகை தராத பிரமுகர்

ஆடம்பரமான அந்த ஹோட்டலின் அரங்கத்தில் பல்கலைக்கழக பழைய மாணவர்கள் சந்தித்துக் கொள்ளும் கூட்டம் தொடங்க இருந்தது. ருசியும் மணமும் மிக்க பழங்களும், முறுகலான சிற்றுண்டிகளும் பல் சுவைபானங்களும் மேஜைகளின் மீது பரப்பி வைக்கப்பட்டிருந்தன.

பழைய மாணவர்களில் பல பிரபல்லஸ்தர்களும், மற்றும் உள்ளூரிலுள்ள செல்வாக்கான பிரமுகர்களும் வந்திருந்தனர். நிகழ்ச்சி தொடங்க வேண்டிய நேரம் கடந்துவிட்ட போதிலும் அதை உணராமல் வந்திருந்த அனைவரும் ஒருவரை ஒருவர் மீண்டும் சந்தித்துக் கொண்டதில் மிகுந்த மகிழ்ச்சியுடன் தங்கள் பழைய நட்பைப் புதுப்பித்துக்கொள்வதில் சுறு சுறுப்பாக இருந்தனர்.

கடைசியில் ஒருவர் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, ''என்ன இது! ஒரு மணி நேரம் தாமதமாகியும் இன்னும் நிகழ்ச்சி தொடங்கவில்லையே,'' என்று சத்தம் போட்டார்.

மற்றவர்களும் தங்கள் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, ''ஆமாம் ஏன் இன்னும் ஆரம்பிக்கவில்லை?'' என்று கேட்டார்கள்.

''நாம் இன்னும் ஒரு பிரமுகருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறோம். அவர்வந்தவுடன் கூட்டத்தை ஆரம்பித்துவிடுவோம்.'' என்று சங்கத் தலைவர் அறிவித்தார்.

'அந்த நபர் யார்?''

''மிஸ்டர். எக்ஸ்''

அங்கிருந்த அனைவரின் கிசுகிசுப்பிற்கும் ஆளானார் அந்த எக்ஸ்.

''அவர் ஆராய்ச்சிக் கழகத்தில்தான் வகித்த பதவியை ராஜினாமா செய்துவிட்டு சொந்தமாகத் தொழில் செய்ய வந்தவர். நண்டு விற்பனை செய்து வருகிறார்,'' என்றார் ஒருவர்.

''அவர் முலாம்பழம் விற்பதாகத்தான் நான் கேள்விப்பட்டேன்.'' என்றார் இன்னொருவர்.

''பணம் சம்பாதிக்க அவர் எதுவும் செய்வார். அவர் முந்திரிக் கொட்டை வறுத்து அதை இனிப்பாகப் பக்குவம் செய்து விற்பனை

செய்ய ஆரம்பித்தது எனக்குத் தெரியும். அவரது வீட்டின் முன் புறத்தில் துருபிடித்த வாணலி இருக்கிறது.'' என்றார் வேறு ஒருவர்.

''அவர் முன்போல இல்லை. இப்போது அவருடைய பெட்டிகளில் ஆயிரக்கணக்கில் யுவான்கள் இருக்கின்றன. சிறு வியாபாரத்தில் இப்போது அவர் ஈடுபடுவதில்லை.''

''அவருக்காக நாம் காத்துக்கொண்டிருக்க வேண்டுமா?'' என்று தலைமுடி நரைத்த முதியவர் கோபமாகக் கேட்டார்.

அதை ஆமோதிப்பதுபோல் எல்லோரும் தலையை ஆட்டியபடி முணுமுணுத்தனர்.

அரங்கில் உள்ளவர்களின் அதிருப்தியைக் கவனித்த தலைவர் எழுந்து நின்று, ''மிஸ்டர் எக்ஸ் தான் இன்று இந்த நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தவர். இந்த அரங்கின் வாடகை, பழங்கள், சிற்றுண்டிகள் மற்றும் பானங்கள் ஆகியவற்றிற்கு ஆன செலவுகளையும் அவரே நன்கொடையாக வழங்கியுள்ளார். முதலில் அவரது நேசப்பான்மையையும் தாராள குணத்தையும் நாம் மதிக்க வேண்டும்! அவரை மன்னிக்கும்படி உங்கள் அனைவரையும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இன்னும் சற்று நேரம் பொறுமையாக இருப்போம்,'' என்று விளக்கினார்.

எல்லோரும் மௌனமாயினர். அமைதி நிலவியது.

தான் மிக முக்கியமான வேலையில் ஈடுபட்டிருப்பதாகவும், அதனால் நிகழ்ச்சியில் கலந்துகொள்ள வர இயலவில்லை என்றும் அதற்காக வருந்துவதாகவும் மிஸ்டர் எக்ஸ். தொலைபேசி மூலம் தெரிவித்தார்.



# 33 தொலை தூரம்

விமான நிலையத்திலிருந்து வெளியே வந்த அந்த மனிதன் புறநகர் செல்லும் பஸ் ஒன்றில் ஏறிக் கொண்டான். பஸ்ஸில் குறைந்த பயணிகளே இருந்தனர். இவன் ஜன்னல் ஓரமாக அமர்ந்து தனக்கு முன்பே பழக்கமானவைகளையும் புதிய காட்சிகளையும் பார்த்துக் கொண்டே இருக்க, இவன் செல்லும் திசைக்கு எதிர்திசையில் அவை ஓடி மறைந்தன.

நீல நிற ஓடுகள் வேயப்பட்டிருந்த ஒரு கட்டிடத்தின் முன்பாக அவனை பஸ் இறக்கிவிட்டது. தன் மூட்டை முடிச்சுகளை சுமந்துகொண்டே இரண்டாவது மாடியில் உள்ள பகுதிக்கு மிகுந்த சிரமத்துடன் படிகளில் ஏறிப் போனான்.

மூச்சு இறைக்கக் கதவைத் தள்ளித் திறந்தான். அறையில் யாவும் முன்போலவே மாறாமல் இருந்தன. படுக்கையில் குழந்தையை விளையாடவிட்டு விட்டு அந்த வீட்டுப் பெண் வெளியே சென்றிருந்தாள்.

அவன் குழந்தையை உற்றுப்பார்த்தான். குழந்தையும் ஆர்வத்தோடு கண்களை அகல விரித்து அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது.

''ஸியாவோபா உனக்கு என்னைத் தெரியவில்லையா?'' என்று குழந்தையின் முன்பாகத் தலையை நீட்டியபடியே கேட்டான்.

''மாமா நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்?'' என்று தலையை ஆட்டிக் கொண்டே குழந்தை கேட்டான்.

''நான்....நாம் பொம்மைகளை வைத்துகொண்டு விளையாடுவோம்.''

அவனும் பையனும் விளையாடிக் கொண்டிருந்த போதிலும் உண்மையில் அவனது மனம் எங்கெங்கோ அலைபாய்ந்து கொண்டிருந்தது.

''நீங்கள் எங்கே மாமா வேலை பார்க்கிறீர்கள்?''

''தொலை தூரத்தில் ஒரு ஊரில்''

''அங்கே என்ன வேலை மாமா?''

''நோயாளிகளுக்கு வைத்தியம் செய்வதுதான் என் வேலை.''

''அப்படியானால் நீங்கள் டாக்டர். நானும் வளர்ந்து பெரியவனானதும் டாக்டராகிவிடுவேன்.''

''நல்லது அதற்கு வேண்டியதைச் செய்யலாம்,'' என்று சம்மதத்தின் அறிகுறியாகத் தனது சுண்டுவிரலைக் கொக்கி போல் வளைத்து பையனின் சுண்டுவிரலில் மாட்டினான்.

''மாமா நீங்கள் அடிக்கடி உங்கள் ஊருக்குப் போவதுண்டா?''

அவன் தலையை ஆட்டினான். பிறகு தன் பையிலிருந்து பல வண்ண ஸ்படிகக்கல் ஒன்றை எடுத்துப் பையனுக்குக் கொடுத்தான். அது கென்யாவில் நோயாளி ஒருவர் இவனுக்குப் பரிசாக அளித்தது.

''நல்ல மாமா நீங்கள்'' என்று பையன் குதூகலித்தான்.

ஆனால் அந்த மனிதனோ சஞ்சலத்திற்குள்ளானான்.

''ஏன் மாமா நீங்கள் அழுகிறீர்கள்? உங்களுக்கு வீட்டு ஞாபகம் வந்துவிட்டதா?''

''ஆமாம். அதேதான்.'' என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

கதவு திறந்து கொண்டது. கூடை நிறைய காய்கறிகளுடன் ஒரு பெண் உள்ளே நுழைந்தாள். ஆனந்தக் கூச்சலிட்டபடி கூடையைத் தொப்பென்று கீழே வைத்துவிட்டு மகிழ்ச்சி ஆரவாரத்தோடு ஓடிச்சென்று அவனது அரவணைப்பில் அடைக்கலமானாள்.

கண்களில் திரண்ட ஆனந்தக் கண்ணீர் வழியும் அவளது கன்னங்களில் அவன் முத்தமிட்டான். இதெல்லாம் என்னவென்று விளங்கிக் கொள்ள முடியாமல் திகைத்துப் போன பையன் அவர்களையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஸியா வோபா ஓடிவா! இவரை 'அப்பா' என்று கூப்பிடு'' என்று பையனை கூவி அழைத்தாள் அந்தப் பெண்.



# 34 கொள்கையில் தளர்வு

புத்தாண்டு பிறந்த அன்று ஹூ மிக நேர்த்தியாக தனது நாள்குறிப்பில் கீழ்கண்டவாறு எழுதினான்:

''நவீன கணிதத்தை நான் பயின்று தேர்வு பெறும்வரையில் எந்தப் பெண்ணுடனும் காதல் விவகாரம் வைத்துக்கொள்ள மாட்டேன். நான் இந்த முடிவிலிருந்து ஒருநாளும் பின்வாங்க மாட்டேன்.''

ஓராண்டிற்குப் பிறகு தனது நவீன கணிதப் பயிற்சியில் ஒரு பகுதியையே முடித்திருந்த சமயம் அன்புள்ள ஒரு பெண்ணின் பரிச்சயம் உண்டாயிற்று. அவன் தன் கொள்கையைத் தளர்த்தி உறுதி மொழியில் மாற்றம் செய்து தினக்குறிப்பில் எழுதும் படியாயிற்று.

''நான் ஒரு பெண்ணைக் காதலித்த போதிலும் எனது படிப்பு முடியும்வரையில் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை.''

மேலும் ஓராண்டு ஓடி மறைந்தது. அவனது படிப்பும் முடிந்தபாடில்லை. எப்படியோ திருமணம் செய்து கொண்டுவிட்டான். திருமணத்தன்று இரவு தனது உறுதி மொழியைப் பின்வருமாறு பதிவுசெய்து கொண்டான்:

''காரியத்தில் இறங்க வேண்டிய தருணம் இது. எனது படிப்பு பூர்த்தியாகும்வரையில் நான் குழந்தை பெற்றுக் கொள்ளப் போவதில்லை என்று உறுதி பூணுகிறேன்.''

நான்கு வருஷங்கள் முடிந்தும் கூட அவனது படிப்பில் சிறிதும் முன்னேற்றமில்லை. பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இடையிலுள்ள பாசத்தை அறிந்த ஹூவுக்கு குழந்தை வேண்டுமென்ற ஆசை பிறந்தது.

ஒரு நாள் இரவு தன் மனைவியுடன் பக்கத்தில் படுத்துக் கொண்டே, ''நமக்காக ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்ள வேண்டும்,'' என்று சொன்னான்.

''நீங்கள் உங்கள் படிப்பு முற்றுப் பெறும்வரையில் குழந்தை வேண்டாம் என்று உறுதி எடுத்துக் கொண்டது நினைவில்லையா?''

''எல்லாம் உனக்குத் தெரியும். மற்ற ஜனங்கள் எல்லோரும் தங்கள் குழந்தைகளுடன் கொஞ்சி விளையாடி எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். நமக்கென்று ஒரு குழந்தை இருந்துவிட்டால், குழந்தை இல்லையே என்ற கவலை இல்லாமல் நிம்மதியாக என்னால் படிக்க முடியும்.''

தன் மனைவியை இதற்கு சம்மதிக்க வைப்பதில் ஹூ வெற்றிபெற்றுவிட்டான். அவன் தனது கொள்கையில் மீண்டும் ஒரு மாற்றம் செய்தான்:

''கடவுளே எனது உறுதிமொழியை நான் காப்பாற்றாமல் போனமைக்கு என்னை மன்னிக்கவும். எனக்கு ஒரு குழந்தை இருந்தால் எனது பெருந்திட்டத்தை நிறைவேற்ற எனது முயற்சியை இரட்டிப்பாக்குவேன்.''

சீக்கிரமே அவனுக்கு ஒரு குழந்தை பிறந்தது. குழந்தையோடு குழந்தையாக அவன் ஒன்றிப் போனான். எப்போதாவது புத்தகங்களை எடுத்துப்படிக்க முயற்சி செய்வான். ஆனால் ஒருபோதும் அது முடிவதில்லை. புத்தகங்களை அப்பால் வைத்துவிடுவான். அப்படி இருந்தும்கூட அவன் தனது டைரியில் பிடிவாதமாக கீழ்கண்டவாறு பொறித்து வைத்தான்:

''சென்றது சென்றதாக இருக்கட்டும். என்முன்னால் பொன்னான நீண்ட எதிர்காலம் இருக்கிறது. என் குழந்தை வளர்ந்து அவன் பெரியவனானதும் எனது படிப்பில் கவனம் செலுத்துவேன்.''

*

## 35 செய்திப் படம்

''தயவு செய்து பத்திரிகை நிர்வாக ஆசிரியர் அறைக்குத் தொடர்பு கொடுக்கவும்.''

''ஹலோ நான்தான் நிர்வாக ஆசிரியர் பேசுகிறேன்.''

''நான் தான் செய்திப் படம் எடுக்கும் யாங்''

''நீ இப்போது எங்கிருந்து பேசுகிறாய்?''

''ஓரியண்டல் ஹோட்டலில் இருந்து பேசுகிறேன். பெய்ஜிங்கிலிருந்து மந்திரி ஏ இப்போதுதான் இங்கு வந்திருக்கிறார்.''

''அவரை ஒரு படம் எடுக்க முயற்சி செய்யவும்.''

''மந்திரியை மாத்திரம் தனியாகவா?''

''இல்லை. மற்றவர்களோடு பேசிக்கொண்டிருக்கும் போது எடுக்கவும்.''

இப்போது சாப்பாட்டு நேரம். மாலையில் ஓய்வாக இருப்பார். அவருக்கு இரவில் நிகழ்ச்சி எதுவும் கிடையாது.

''முதலில் அவரது செயலாளரிடம் தொடர்பு கொண்டு அவரது உதவியைப் பெறவும். உணவு அருந்திய பிறகு மந்திரியை சந்திக்க முயற்சி செய்யவும். அவரை சில பிரதிநிதிகள் சந்திக்க விரும்புவதாகவும் சொல்லவும். இந்த கோரிக்கையை அவர் மறுக்க மாட்டார் என்று நான் நம்புகிறேன்.''

''நான் முயற்சி செய்கிறேன்.''

இதற்கு நீ ஏற்பாடுசெய்த பிறகு சில பிரதிநிதிகளை அணுகி.மந்திரி அவர்களை சந்திக்க விரும்புவதாக சொல்லவும். மந்திரியின் அறையில் பிரதிநிதிகள் மந்திரியுடன் கை குலுக்கிக் கொண்டிருக்கும் சமயம் உடனே படம் எடுத்துவிடவும். இதற்குசிலநிமிஷங்களே ஆகும்.''

''மந்திரியை சந்திக்க யாரை அழைப்பது?''

''இரு. பிரதிநிதிகள் தங்கி இருக்கும் அறைகளின் பட்டியல்என்னிடம் இருக்கிறது. மந்திரி எந்த அறையில் தங்கி இருக்கிறார்?''

''மந்திரி தங்கி இருக்கும் அறைஎண் 611.''

''மந்திரிக்கு அடுத்த அறையில் இருக்கும் பிரதிநிதி புகழை விரும்புகிறவராக இருக்கலாம் அல்லவா? அவருடன் மேலும் மூன்று நான்கு பேர்களையும் சேர்த்துக் கொள்ளவும். இதுவே போதுமானது என்று நினைக்கிறேன்.''

''சரி. அப்படியே செய்கிறேன்.''

''நீ அனுப்பிவைக்கப் போகும் படத்திற்காக பத்திரிகையில் முதல் பக்கத்தில் இடம் ஒதுக்கி வைத்துவிடுகிறேன். இரவு எட்டு மணிக்குள் படத்தை அனுப்பிவிடவும். செய்திப் பத்திரிகையில் படத்திற்கான தலைப்பையும் தயாராக எழுதிவைத்துவிடுகிறேன்.

தொலைபேசியைக் கீழே வைத்துவிட்டு ஆசிரியர் சில வினாடிகள் யோசனை செய்துவிட்டு எழுத ஆரம்பித்தார்:

ஓய்வு எடுத்துக் கொள்வதற்குக் கூடநேரம் ஒதுக்காமல் மந்திரி ஏ அவர்கள் நடுவில் இருப்பவர் விமானத்தில் இருந்து இறங்கி வந்த உடன் ஜே மகாநாட்டுப் பிரதிநிதிகளுடன் உரையாடுகிறார்.



# 36 அவர் யார்?

சாப்பாட்டு இடைவேளையில் ஒரு அறையில் அவர்கள் தங்கி இருந்த சமயம் அவர்களில் ஒருவன் இப்படி ஒரு கேள்வியைக் கேட்டான்:

''இந்த அறையின் எல்லா கதவுகளும் மூடப்பட்டு நாம் அனைவரும் இங்கு மூச்சுத்திணறிக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொள்வோம். நம்மில் யாராவது ஒருவர் மட்டும் வெளியே செல்ல அனுமதிக்கப்பட்டு மற்ற அனைவரும் சாகப்போகிறோம். வெளியில் செல்லும் அந்த ஒருவர் யாராக இருக்க வேண்டும்?''

திடீரென ஒருவன் சொன்னான்: ''வயதில் மிகவும் இளைஞனான ஒருவனுக்கு இந்த வாய்ப்புத் தரப்பட வேண்டும்'' என்று நான் நினைக்கிறேன்.'' ''வயதானவர்களான நாமெல்லாம் முன்பே வாழ்க்கையில் கிடைக்க வேண்டிய சுகபோகங்களை எல்லாம் - திருமணம், குழந்தைகள், மற்றும் பலவற்றையும் - அனுபவித்துவிட்டோம்....''

ஒரு இளைஞன் குறுக்கிட்டான்: ''யாருக்குப் பெரிய குடும்பம் இருக்கிறதோ அவர் உயிரோடு வெளியே சென்று தனது குடும்பத்தைப் பராமரிக்க வேண்டும். வாலிபர்களாகிய நாங்கள் திருமணம் ஆகாதவர்கள் எங்களுக்கென்று எவ்வித பொறுப்பும் கவலையும் இல்லாதவர்கள். ஆகவே எங்களுக்கு மரணபயம் சிறிதும் இல்லை.''

''ஆண்கள் மரணமடையட்டும் என்று விட்டு விட்டு ஒரு பெண் வெளியில் செல்ல வேண்டும்.''

''பலவீனமான ஒருநபர்தான் வெளியே செல்ல வேண்டும். பலவீனமானவர்களுக்கு இரக்கம் காட்டுவதுதான் மனிதாபிமானம்.''

''இந்த பதில்கள் அனைத்தும் உபயோகமற்றவை. இளைஞன், வயோதிகர்,பெரியகுடும்பஸ்தன், பலவீனமானவன். பெண், ஆகிய இந்த ஒவ்வொரு வகையினரிலும் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் இங்கு உள்ளனர். இதிலும் யாரோ ஒருவர்தான் வெளியேற முடியும் என்பதுதான் பிரச்சினை. நம் அனைவரையும் விடுவிக்கக்கூடிய சக்தி உள்ள ஒருவரை நாம் தெரிந்தெடுக்க வேண்டும் என்ற யோசனையை நான் முன்வைக்கிறேன்.''

''அந்த நபர், நான் மிகவும் நேசிக்கும் எனது காதலராக இருக்கட்டும். காதலுக்காக உயிர் தியாகம் செய்வது புனித மரணமாகும்.''

''யாரும் வெளியே போக வேண்டாம் எல்லோரும் ஒன்றாக மரணத்தைத் தழுவிக் கொள்வோம்.''

''முதலில் நம்மைக் கொல்வதாகப் பயமுறுத்துவது எது என்பதைக் கண்டறிய வேண்டும். பிறகு அதை எதிர்த்து நாம் போராட முடியும். அப்போதுதான் நாம் அனைவரும் உயிரோடு வெளியேற முடியும். மரணத்தை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பது மானிட இயல்பு அல்லவே.''

''நான் சொல்கிறேன்.....''

''நான் என்ன சொல்ல.....''

''சுவாரஸ்யமான இந்த விவாதத்தைக் கேட்டுக் கொண்டுவந்த குழுத் தலைவர் அறைக்குள் நுழைந்து ஆர்வத்தோடு கேட்டார்: ''எல்லோரும் எதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறீர்கள்?''

அவரது பதிலைத் தெரிந்து கொள்ள எல்லோரும் உடனே கேள்வியை விளக்கிச் சொல்ல முற்பட்டனர்.

''அது மிகவும் சுலபமானது. சீட்டுக் குலுக்கிப் போட்டு தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டியது,'' என்றார் தலைவர்.

மேலும் சிரித்தபடியே,''நமது குழுவில் யாராவது ஒருவருக்கு ஒரு புது சைக்கிள் வாங்கிக் கொடுக்க அனுமதி கிடைத்துள்ளது,'' என்றார் குழுத்தலைவர்.

''எனக்குக் கொடுங்கள் - எனக்குக் கொடுங்கள்,'' என்று எல்லோரும் தங்கள் கையை உயர்த்தினார்கள்.

''அவசரப்படாதீர்கள்,இது ஒன்றும் வாழ்வதா, சாவதா என்பதான பிரச்சினை அல்ல.''

''நாம் முட்டாள்களாக ஆக்கப்பட்டுவிட்டோம்,'' என்று கத்தினார் ஒருவர்.குழுத்தலைவரின் தந்திரத்தைப் புரிந்து கொண்டு....

எல்லோரும் சிரித்தபடியே;

"எனக்குத் தேவை இல்லை'' என்றுசொன்னார்கள்.



# 37 தந்த மருந்தில் திருப்தி இல்லை

டாக்டரைப் பார்க்க அவன் தன் முறைக்காகக் காத்துக் கொண்டிருந்தான். மருத்துவப் பரிசோதனைக் குறிப்பு அவன் கையிலிருந்தது. அவனது இதயம் அடித்துக் கொள்வதாகவும் இரத்த அழுத்தம் அதிகரிப்பதாகவும் எண்ணிக் கொண்டான். நேற்று முன்தினம் அவன் இங்கு வந்தபோது தலைமைப் பொறுப்பில் உள்ள டாக்டர் இல்லாததால் அங்கிருந்த பெண் டாக்டர் பரிசோதனை செய்து மருந்துகள் எழுதிக் கொடுத்திருந்தார். கடைக்குச் சென்று மருந்துகளை வாங்கிய போதுதான், பெண் டாக்டர் எழுதிக் கொடுத்திருந்த மருந்தின் விலை வெறும் எட்டுஃபென்தான் என்று தெரிய

வந்தது. எட்டு ஃபென் விலையுள்ள மலிவான இந்த மருந்து எப்படி வியாதியைக் குணப்படுத்தும்?

திரும்பவும் மறுநாள் ஆஸ்பத்திரிக்கு வரவேண்டுமென்ற தீர்மானத்துடன் அவன் வீடு திரும்பினான். இந்த இளம் பெண் டாக்டரின் பரிசோதனை சரியாக இருக்குமா? வியாதியைக் கண்டு அறியும் நான்குமுறைகளும் இந்தப் பெண் டாக்டருக்குத் தெரியுமா? உரிய காலங்கடந்த பிறகுதான் இஞ்சி காய்ந்து சுக்காகி காரம் பெறுகிறது. நாளாகத்தான் சாராயம் மணம் வீசுகிறது. இந்தப் பெண் டாக்டரின் கூந்தலைவிட பெரிய டாக்டரின் மீசை நீளமானது.

இப்படியாக சிந்தனை செய்தவாறே மின்சார கடிகாரத்தின் ஓசையைக் கேட்டுக்கொண்டே மரக்கட்டை போல் அமர்ந்திருந்தான். அவனது முறை வருவதற்கு இரண்டு மணிநேரம் காத்திருந்தான்.

இறுதியாக இரண்டு அங்குல நீளம் மீசை உள்ள பெரிய டாக்டரின் முன்பு நின்றான். டாக்டரின் கை அவனது நாடியைப் பிடித்துப் பார்த்தபோது அவனதுஉடலில் நம்பிக்கை எழுச்சியுற்றது. அதே சமயம் முந்தா நாள் எட்டு ஃபென் விலை உள்ள மருந்து எழுதிக் கொடுத்த பெண் டாக்டரை அவன் அலட்சியமாகப் பார்த்தான்.

பரிசோதனைக்குப் பின் மருந்துச் சீட்டை வாங்கிக்கொண்டு மருந்துக்கடைக்குப் போகும் வழியில் தனது சகா ஒருவனை சந்தித்தான்.

''நான் பெரிய டாக்டரிடம் வைத்தியம் செய்து கொள்கிறேன். அவர் எழுதிக் கொடுத்துள்ள மருந்துச்சீட்டு இதுதான். இதில் அவரது முத்திரையும் உள்ளது'' என்று பெருமையோடு சொல்லிக் கொண்டே ஒரு சீட்டை எடுத்துக்காட்டினான்.

பெருமிதத்தோடு மருந்துக்கடையில் டாக்டரின் சீட்டையும் அத்துடன் பத்து யுவான் கரன்ஸிநோட்டு ஒன்றையும் எடுத்து

நீட்டினான். அதுவும் போதாது என்றால் நண்பனிடம் கடன் வாங்கிக் கொள்வான்.

''எட்டு ஃபென்'' என்று மருந்துக்கடை பெண்ணின் குரல் ஒலித்தது. அவன் சுற்றிலும் பார்த்தான். அங்கு வேறு யாருமில்லை.

புன் முறுவல் செய்தபடி ஒரு முகம் தலையை நீட்டி, ''உங்கள் மருந்தின் விலைதான் எட்டு ஃபென்,'' என்று கூறியது.

''எனக்கா?'' அவன் இன்னும் திருப்தி அடையவில்லை.

''ஆமாம். அன்றுபோலத்தான்; உங்களுக்குத்தான். அன்று மீதி இரண்டு ஃபென் சில்லரையை வைத்தேன். அதை நீங்கள் எடுத்துக்கொள்ள மறந்துவிட்டீர்கள்.'' என்று சொல்லிய அந்தப் பெண்ணின் கண்கள் சிரிப்பது போல் தோன்றியது.

''இன்று பெரிய டாக்டர் எழுதிக்கொடுத்த மருந்திற்காக ஆறு ஃபென் கொடுத்தால் போதும்''

''அது எப்படி? அந்தப் பெண் டாக்டர் எழுதிக் கொடுத்த அதே மருந்தைத்தானா பெரிய டாக்டரும் எழுதிக்கொடுத்திருக்கிறார்?''

மருந்தை எடுத்து சட்டைப் பையில் வைத்துக் கொண்டு எதுவும் பேசாமல் கடையிலிருந்து வெளியே வந்தான்.



## 38 யாருக்குப் பரிசு?

ஆடை அலங்காரக் காட்சி நடைபெறும் துணிக்கடைக்குச் சென்ற போது முதலில் எனது கண்களைக் கவர்ந்தது, கண்ணாடி அலமாரிக்குள் வைக்கப்பட்டிருந்த பெண் உருவப் பொம்மைதான். அதன் மெலிந்த உடலில் கம்பளிக் கால்சட்டை மேல் நாட்டுப் பாணியிலானது - நாகரீகமாக அணிவிக்கப்பட்டிருந்தது. அதன்

தலைமுடி ஒய்யாரமாக, ஒழுங்காக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் கனிவான கண்களில் அன்பும் பாசமும் ஊறித் ததும்பியது. அதன் இதமான புன்முறுவலில் இனிமையும் நேசபாவமும் தவழ்ந்தது.

காட்சி அரங்கின் மேல்புறமாக மின்னும் எழுத்துக்களால் வரையப்பட்ட ஒரு பெரிய சிவப்பு அட்டை தொங்கியது. அதில், ''எங்கள் நிறுவனத்தில் பணிபுரிகிறவர்களில் சிறந்த விற்பனையாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் பங்கு கொள்ள வருமாறு வாடிக்கையாளர்கள் அனைவரையும் அழைக்கிறோம்,'' என்று எழுதப்பட்டிருந்தது. இந்த அறிவிப்பு அட்டையின் கீழே ஒரு சாய்வு மேஜையின் மீது வாக்குச் சீட்டுகள் குவிக்கப்பட்டிருந்தன. அனைவர் கண்களிலும் படும்படியாக 'சிறந்த விற்பனையாளர்,' என்பதற்கான யோக்கியதாம்சங்கள் என்னென்ன என்பதை விளக்கும் அறிவிப்பும் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்தது.

ஒரு வாரம் சென்றதும் தேர்வின் முடிவு அறிவிக்கப் பட்டிருந்தது. நானும் வாக்களித்திருந்ததால் முடிவைத் தெரிந்து கொள்ள மிகுந்த ஆர்வத்தோடு இருந்தேன். தேர்வில் முதல் இடம் யாருக்கும் கிடைக்காமல் காட்சி அலமாரியில் வைக்கப்பட்டிருந்த பெண் பொம்மைக்குக் கிடைத்திருப்பதை அறிந்ததும் நான் வியப்படைந்தேன். என்ன அசட்டுத்தனம்!

ஒரு வாக்குச் சீட்டில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

''அவ்ளது எடுப்பான தோற்றம், கொலு, நேர்த்தியாக நிற்கும் பாங்கு முகவசீகரம், உள்ளங்கவரும் இளநகை, எப்போதும் வாடிக்கையாளர்களுக்கு பரவச மூட்டுவ்தாக இருக்கிறது. பெண் சமூகத்திற்கு எடுத்துக்காட்டான நேசபாவமிக்க இந்தப் பெண் வாடிக்கையாளர்களிடம் ஒருபோதும் சிடு சிடுப்பாக நடந்து கொண்டதில்லை. ஆகவே இந்தப் பரிசுக்கு இவள்தான் முற்றிலும் தகுதியானவள்''

''என்ன கேவலம் இது! ஒரு பொம்மையை அவள் என்று சொல்வது என்ன மோசடி! அது வெறும் பொம்மை தானே'' என்று என் மனதிற்குள் சொல்லிக் கொண்டு அங்கிருந்து வெளியேறினேன்.

卐

# 39 பறக்கும் புறா

நான் குள்ளமாக இருப்பதால் எனக்காக எனது 'மகள் ஒரு புதிய ✱ 26 பறக்கும் புறா' மோட்டார் சைக்கிளை வாங்கி பின் வாசல் வழியாக வீட்டிற்குக் கொண்டு வந்தாள்.

அவள் கொண்டுவந்த அன்றே சைக்கிளின் இரண்டு கைப்பிடிக்கும் இடையில் பளபளப்பான சிவப்பு நாடாவையும் கட்டி வைத்தாள்.

''ஒரு ஐம்பது வயது கிழவனுக்கு இது போன்ற மோட்டார் சைக்கிள் சவாரியே பகட்டானதாகும். மேலும் இந்த சிவப்பு நாடா வேறு எதற்கு?'' என்று என் மகளைக் கேட்டேன்.

''அதனால் என்ன அப்பா?'' நம்மால் முடிந்தவரை வாழ்க்கையை அழகியலோடு அமைத்துக் கொள்ள வேண்டும், என்று கூறினாள்.

அவளது வார்த்தைகள் எனக்கு உற்சாகம் அளித்தன. உண்மையில் சொல்லப் போனால் அந்த ஜொலிக்கும் சிவப்பு நாடா எனக்குப் பிடித்திருந்தது. அது என்னைப் பல வருஷங்கள் வயதில் குறைந்தவனாக எண்ணிக் கொள்ளும்படி செய்தது.

---

✱ 'பறக்கும் புறா' என்பது சீனாவில் உள்ள உயர்ந்த ரக மோட்ட்ரார் சைக்கிள் வகைகளில் ஒன்றாகும். ''26 ரகம் என்பது ஆண்களுக்கு ஒவ்வாத சிறியரகம்''.28, ரகம்தான் சீனாவில் ஆண்கள் உபயோகிக்கும் வண்டியாகும்.

பிற்பகல் என் மகன் வீட்டிற்கு வந்தபோது அந்த வண்டியை ஏதோ அசிங்கமான ஒரு பொருளைப்பார்ப்பது போல் உற்றுப் பார்த்தான்.

''அப்பா, உடனே உங்கள் வண்டியைக் கிடங்கில் போடுங்கள். இது போன்றதை ஜியாஜின் பார்த்துவிட்டால் என்ன சொல்வாள்?'' என்று சத்தம் போட்டான்.

நான் சிவப்பு நாடாவுடன் கூடிய 'பறக்கும் புறா',வில் சவாரி செய்வதைப் பற்றி அவனது தோழி ஜியாஜின் ஏன் கவலைப்பட வேண்டும், என்பது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நான் அந்த வண்டியை அங்கேயே இருக்கட்டும் என்று விட்டுவிட்டேன். ஜியாஜின் உள்ளே நுழைந்தபோது, வெளியே நிற்கும் வண்டி யாருடையது என்று கேட்டுக் கொண்டே வந்தாள். என்னுடையதுதான் என்று அவளிடம் சொன்னேன்.

அவள் ஒரு வினாடி என் மீது தன்பார்வையை வீசினாள்.

நான் சமையல் அறையில் இருந்தபோது அவள் என் மகனிடம், ''என்ன உங்கள் அப்பாவுக்கு...இளமை திரும்புகிறதோ...ஹா..ஹா....இதற்கு மேல் நான் எதுவும் சொல்லாமல் இருப்பதே நல்லது.....'' என்று கிசு கிசுத்தது என் காதிலும் விழுந்தது.

அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை என் புதிய வண்டியில் சந்தைக்குச் சென்று வரமுடிவு செய்தேன். எனது வண்டியை வெளியே எடுத்த வினாடியே அண்டை வீட்டுக்காரர்கள் அனைவரும் வேடிக்கை பார்ப்பதுபோல் என்னை சூழ்ந்து கொண்டார்கள். பிறர் விஷயங்களில் அனாவசியமாகத் தலையிடும் ஒரு பெண் என்னைப் பார்த்து கேலியாகப் பேசினாள்:

''ஓ, காங் அண்ணா நீங்கள் வயதானவராக இருந்தாலும் மேலும் மேலும் உங்கள் அழகு கூடிக்கொண்டே வருகிறது. என்ன அழகு! அண்ணா இதில் நீங்கள் சவாரி செய்யும்போது இளவயது

பெண்களை மட்டுமல்லாமல் விதவைப் பெண்களையும் கூட நீங்கள் மயக்கிவிடுவீர்கள்.''

கணவன் மீது விசுவாசம் இல்லாத ஒரு பெண் - அவளது தவறான நடவடிக்கைகளை எல்லோரும் அறிவார்கள். அவள் கணவனைத்தவிர -, ''இவர் தன் மனைவியை இழந்து பல வருஷங்களாகிவிட்டன. இனியும் காங் அண்ணாவால் தனிமையில் இருக்க முடியாது. அவர் தனக்கு ஏதாவது ஒரு துணையைத் தேடித்தான் ஆகவேண்டும்.....,'' என்றாள்.

அன்று மாலையே எனது மகன் மட்டுமல்லாமல், எனக்கு இந்தத் தொல்லையைக் கொடுத்த எனது மகளும் சேர்ந்து கொண்டு அந்த சிவப்பு நாடாவை வண்டியிலிருந்து எடுத்துவிடும்படி கூறினார்கள்.

''அப்பா இந்த தொல்லையில் இருந்து விடுபட அந்த சிவப்பு நாடாவை எடுத்துவிடுங்கள்.'' என்று வேகமாகவே சொன்னார்கள்.

சிவப்பு நாடா கட்டிய 26 வண்டி ஒரே இரவில் எப்படி ஒரு மனிதனை ஒழுக்கங் கெட்டவனாக ஆக்கிவிட முடியும் என்பதை நம்ப மறுத்தேன். வானமே இடிந்து விழுந்தாலும் சிவப்பு நாடாவுடன் அதே வண்டியில் சவாரி செய்வதில் நான் உறுதியாக இருந்தேன்.

அடுத்த நாள் திங்கள்கிழமை நான் பண்டகசாலை காப்பாளனாக வேலை செய்யும் தொழிற்சாலைக்கு எனது வண்டியிலேயே சென்றேன்.

தொழிற்சாலை வாசலில் வண்டியை நிறுத்திய உடனேயே எனது அலுவலக சகாக்களின் பேச்செல்லாம் என் வண்டியைப் பற்றியதாகவே இருந்தது. அவர்களது தினசரி வேலைகளே, தேநீர் பருகுவதும் செய்தித்தாள் படிப்பதும் மற்றவர்களின் விவகாரங்களில் மூக்கை நுழைப்பதும்தான்.

''வயதான இந்த கிழவர் காங் இன்று காலை அதிகமாக மது அருந்தி இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். ஏனென்றால் காங் அவரது வருங்கால மருமகளின் வண்டியில் வந்திருக்கிறார்,'' என்று சொன்னார் ஒருவர்.

மற்றவரோ, ''பெரியவர் காங் போன்ற திடசித்தமுள்ள ஆள் இப்படியான, மாறாட்டமான செயலை செய்வாரென்று நாம் சற்றும் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை,'' என்றார். அன்று காலை முழுதும் அவர்களது பேச்செல்லாம் பளபள சிவப்பு நாடா பற்றியும், 'பறக்கும் புறா' பற்றியதாகவுமே இருந்தது.

அன்று மதியம் நான் கட்சியில் சேர்வதற்காக கொடுத்திருந்த விண்ணப்பம் பற்றி விவாதிக்க கட்சிக் கிளைக்குழுவின் கூட்டம் நடந்தது. இம்மாதிரியான கூட்டங்களில் பொதுவாக உறுப்பினர்கள் பேசிக் கொண்டே இருப்பார்கள். ஆனால் அன்று யாரும் பேசவில்லை. நீண்ட இடைவெளிக்குப் பிறகு வெளிப்படையாகப் பேசும் கொதிகலன் பிரிவில் வேலை செய்யும் டாஷ¬ன் இந்த மௌனத்தைக் கலைத்தார்:

''நான் சொல்லப் போவது நிச்சயம் அவ்வளவு மகிழ்ச்சியானதாக இருக்காது.'' என்று மேலும் தொடர்ந்து சொன்னார்:'' இந்த வயதான காங் உண்மையில் கடுமையான உழைப்பாளி, நேர்மையானவர். ஆனால் கொஞ்ச நாட்களாக அவரிடம் ஏதோ கோளாறு ஏற்பட்டிருப்பது போல் தோன்றுகிறது. வெளிப்படையாக மனம் திறந்து சொல்ல வேண்டுமானால் தற்போது இந்த வண்டி இளம் வயதினர்க்கே உரியது. ஐம்பது வயதைக் கடந்துவிட்ட ஒருவர் அந்த வண்டியை ஓட்டி வருவதைப் பார்க்கும்போது அது அழகாகத் தோன்றவில்லை. யதார்த்தமாகப் பார்த்தால், இந்த பெரியவர் காங்கை கட்சியில் சேர்த்துக் கொள்வதற்கு முன் அவர் தன் நடைமுறைப் பழக்கங்களை மாற்றிக் கொள்ள வேண்டும்.''

பிறர் மனதைத் தொடும் வகையில் மென்மையாகப் பேசக்கூடிய டயாங், ''தோழர் காங்கின் நடத்தை சமீப காலமாகத்தான் சிறிது தடம் மாறியுள்ளது....''என்றார்.

அவர் பேசிக்கொண்டிருக்கும் போதே, வயதானவர் களுக்காக வரன் தேடும் அலுவலகத்திலிருந்து எனக்கு தொலைபேசி அழைப்பு வந்தது:

''ஹலோ, அது யார் பெரியவர் காங் தானே? முன்னொரு நாள் பனியன் தொழிற்சாலையில் வேலை செய்யும் ஒரு பெண்ணை உங்களுக்கு அறிமுகப்படுத்தியது நினைவிருக்கிறதா? அந்தப் பெண் ஏற்கெனவே உங்களைத் திருமணம் செய்து கொள்ள சம்மதித்திருந்தாள்.

ஆனால் அவள் இன்று காலை உங்களை சிவப்பு நாடா கட்டிய ''26 வண்டியில் போவதைப் பார்த்தாளாம். அவள் இங்கு வந்து நீங்கள் பண்பாடு இல்லாதவர் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள். என்ன நேர்ந்தது?''

திகைப்பும் கோபமும் ஒருங்குசேர நான் வெளியே வந்துவிட்டேன். நான் கண் விழித்தபோது மருத்துவ மனையில் ஒரு படுக்கையில் கிடந்தேன்.

''ஐயோ அப்பா உங்கள் மகள் உங்களைக் கொன்றிருப்பாள்......'' என்று கதறி அழுது கொண்டிருக்கும் என் மகளையும் என் அருகில் பார்த்தேன்.

*

# 40 மருத்துவமனைக்கு வெளியே

மழைக்காலத்தில் ஒரு நாள் பிற்பகலில் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய எழுத்தர் ஜாங் அவர்களிடம் அவரது மனைவி அவர் வேலை செய்யும் நிறுவனத்தின் நிர்வாகப் பொறுப்பு வகிக்கும் உதவி செயலர் காங், மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருப்பதாகத் தெரிவித்தாள்.

''கடுமையாக உடல் நலம் பாதிக்கப்பட்டுள்ளாரோ? முந்தா நாள் நான் அவரைப் பார்த்தேன். நன்றாகத்தானே இருந்தார்,'' என்று திகைப்புடன் சொன்னார் ஜாங்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் உதவி செயலர் காங் நமது பையன் வேலையில் சேர உதவி செய்தது ஞாபகமிருக்கட்டும். அவரது உடல்நிலை பற்றி நாம் ஜோஸியம் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. ஆனால் அடுத்த வருஷம் நமது இரண்டாவது பையன் பட்டம் பெற்று வந்தவுடன் அவரது உதவி நமக்குத் தேவைப்படும். ஆகவே அவரது நோய் கடுமையானதா இல்லையா என்பதல்ல முக்கியம். நீங்கள் மருத்துவமனை சென்று பார்த்து அவருடன் அதிகநேரம் தங்கி ஆறுதல் கூறிவர வேண்டும்,'' என்றாள் அவரது மனைவி.

''நீ சொல்வது சரிதான். நான் உடனே மருத்துவமனை சென்று அவரைப் பார்க்கிறேன்,'' என்று ஜாங் சொல்லிக் கொண்டே தன் நெற்றியில் வியர்வையைத் துடைத்துக் கொண்டார். பிறகு சைக்கிளில் புறப்பட்டுச் சென்றார்.

போகும் வழியில் ஒரு கடையில் இரண்டு பொட்டலங்கள் பால்பவுடரும் இரண்டு டப்பா குளுகோசும் வாங்கி சைக்கிளில் உள்ள கூடையில் வைத்துக் கொண்டார். அற்பமான இந்தப் பொருள்களைப் பார்த்து உதவி செயலர் வெறுப்படைவாரோ

என்று எண்ணி அவர் சங்கடப்பட்டார். எனவே ஒரு கூடை பேரிக்காய்களும் வாழைப்பழங்களும் வாங்கிக் கொண்டார். இவை எல்லாவற்றிற்குமாக பதினான்கு யுவான் செலவு செய்துவிட்டார். பணம் செலவழிவது ஒன்றும் சிறிய விஷயம் அல்லதான். ஆனால் இந்தக் காலத்தில் செல்வாக்குள்ள பிரமுகர்களின் உதவி கிடைப்பது மிகவும் அரிது என்று அறிவார்ந்த முடிவுக்கு வந்தார். வேறு எவ்வித சிந்தனையுமின்றி சைக்கிளில் மருத்துவ மனை நோக்கி விரைந்தார்.

சைக்கிளை விட்டிறங்கி அதை நிறுத்துவதற்குள் தன்னை யாரோ கூப்பிடுவது காதில் விழுந்தது. எப்போதும், உதவி செயலர் காங் மீது குற்றம் கண்டுபிடிப்பதே வழக்கமாகக் கொண்ட சுன், தான் இவரைக் கூப்பிட்டது.

ஜாங் பரிசுப் பொருள்கள் கொண்டு வந்திருப்பதை சுன் பார்த்துவிட்டால் அதனால் பல சங்கடங்கள் விளையும். இதற்கு என்ன சாக்குப் போக்கு சொல்லலாம் என்று ஜாங் யோசிப்பதற்குள் சுன் வருத்தம் தோய்ந்த முகத்துடன் ஜாங்கிடம் நெருங்கி வந்துவிட்டான். ''ரொம்ப பயங்கரமானது ஜாங், நமது உதவி செயலரின் நுரையீரலில் புற்றுநோய் தாக்கி மிகுந்த அவதிப்படுகிறார்,'' என்று மிகுந்த கவலையோடு சுன் சொன்னான்.

''என்ன? உதவிசெயலர் மருத்துவ மனையிலா? இதுவரை எனக்கு இதுபற்றி எதுவுமே தெரியாதே. இது மிகவும் கொடுமையானது,'' என்றுதானே நோய்வாய்பட்டவன் போல ஜாங்கின் முகம் வெளிறிப்போனது.

''ஆம் இப்படி திடகாத்திரமான மனிதருக்கு இம்மாதிரி கடுமையான நோய் கண்டு துன்பப்படுத்துமென்று நான் கனவில்கூட நினைத்ததில்லை. இன்னும் ஐந்தாறு வருஷங்கள் அவர் வேலை பார்க்க முடியும். விவசாயத்துறையில் வேலை பார்க்கும் யாரோ ஒருவர் கிராம வைத்தியம் மூலம் இவ்வியாதியைக் குணப்படுத்துகிறார் என்று கேள்விப்படுகிறேன்.

அதைப்பற்றி விபரமாக, விசாரித்து தெரிந்து வரத்தான் நான் போய்க் கொண்டிருக்கிறேன். குறைந்தபட்சம் நான் செய்யக்கூடியது இதுதான்,'' என்று சொல்லிவிட்டு சுன் விரைந்து நடந்தான்.

அங்கிருந்து அகன்ற சுன் உருவம் மறைவதைக் கண்ட ஜாங் தனக்குள் முணு முணுத்துக் கொண்டான்.

''சாதாரணமாக நுரையீரலில் புற்றுநோய் கண்டவர்கள் சிலமாதங்களே உயிரோடிருப்பார்கள். கிராமப்புற வைத்தியம் இதைக் குணப்படுத்திவிடும் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. இன்னும் ஒரு வருஷத்திற்குள் 'எனது இரண்டாவது மகனின் படிப்பும் பூர்த்தி பெறாத நிலையில்.....''

சைக்கிள் பெட்டியில் இருக்கும் பரிசுப் பண்டங்களை உற்றுப் பார்த்தார். மருத்துவமனைப் பக்கமாகத் திரும்பிப் பார்த்து, ''இந்த நிலையில் நான் ஏன் அவரைப் போய் பார்க்க வேண்டும்,'' என்று எண்ணியபடியே சைக்கிளில் ஏறி வீட்டுக்குத் திரும்பிவிட்டார்.



# 41 மன மாற்றம்

எனது முதல் சிறுகதை இறுதியாக ஒரு சஞ்சிகையில் பிரசுரமாயிற்று. என்னுடன் வேலை செய்யும் சகாக்கள் இதற்காக தங்களுக்கு உபசரிப்பு நடத்த வேண்டுமென்று விரும்பினார்கள். ஆளுக்கு ஒரு பாக்கெட் சிகரெட் வாங்கிக் கொடுத்தேன். எங்கள் நிறுவன இயக்குனரிடம் நீட்டியபோது அவர் எடுத்துக் கொள்ள மறுத்துவிட்டார். முகம் சுளித்தவாறு தனது சட்டைப் பையிலிருந்து சிகரெட் எடுத்துக் கொண்டார்.

ஏன் இப்படி சிடு மூஞ்சியாக நடந்து கொள்கிறார்? இவர் மனம் புண்படும்படியாக நான் ஏதாவது சொல்லிவிட்டேனோ?

அல்லது அவரைத் துன்புறுத்தும்படியாக ஏதாவது செய்துவிட்டேனோ? இயக்குனர் வாங் ரோஷக்காரர். உணர்ச்சி வசப்படுகிறவர் என்பது தெரிந்த விஷயம்தான்.

பிற்பகல் இயக்குனர் தன் அறைக்கு என்னை அழைத்தார். ''ஷ-வெங், இப்போதெல்லாம் காரண காரியங்களிலிருந்துதான் உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டும், என்ற கொள்கையை நாம் பின்பற்றி வருகிறோம். ஆகவே நாம் எதைச் சொன்னாலும் அது நேர்மையானதாகவும் உண்மையானதாகவும் இருக்க வேண்டும்,'' என்று சொன்னார்.

அவர் எதைக் குறிப்பிட்டுப் பேசுகிறார் என்று எனக்குப் புரியவில்லை.

நான் எங்கே எப்போது என்ன தவறு செய்தேன் என்பதை விபரமாக சொல்லுங்கள்'' என்று பணிவுடன் கேட்டேன்.

''உன்னுடைய கட்டுரையைப் பற்றித்தான். அது உண்மையில் நடந்த விஷயம்தானா?'' என்று கடுமையான குரலில் கேட்டார்.

அவர் ஏன் கோபம் அடைந்துள்ளார் என்பதை நான் இப்போது புரிந்து கொண்டேன். என்னுடைய சிறுகதை நேர்மையற்ற முறையில் ரகசியமாகத் தன் சுயநலத்திற்காகத் தன் பதவியைப் பயன்படுத்தும் ஒரு இயக்குனரைப் பற்றியது. ஆகவே என்கதை தன்னைத்தான் மறைமுகமாகக் குறிப்பிடுகிறது என்று இயக்குனர் சந்தேகிக்கக் கூடுமென்று முன்கூட்டியே என்னால் யூகிக்க முடியவில்லை.

''எனது கதை முழுக்க முழுக்க கற்பனையானது. அப்படி எந்த சம்பவமும் நடக்கவில்லை. தயவுடன் கேட்டுக் கொள்கிறேன், என்னை நம்புங்கள். என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள்,'' என்று விளக்கிச் சொன்னேன்.

அவரது மனக்கொதிப்பின் வேகம் தணிந்தது.

''இருக்கலாம். எனக்குத் தெரியும். ஆனால் நீ இந்த மாதிரிக் கதைகள் எழுதாமல் இருப்பது நல்லது, என்று நினைக்கிறேன். உனது ஓய்வு நேரத்தை நீ ஏன் சீட்டு விளையாடுவதிலும், தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்த்து ரசிப்பதிலும் செலவிடக் கூடாது? மேலும் இரவில் வெகு நேரம் கண்விழித்து எழுதிக் கொண்டிருந்தால் மறுநாள் உனது வேலைகளைக் கவனிக்க உனக்குப் போதிய சக்தி இருக்காது.''

நான் இனி கதைகள் எழுதுவதில்லை என முடிவு செய்துவிட்டேன். ஆனால் இதற்கு முன்பாகவே ஒரு கதையை எழுதி முடித்திருந்ததால் அதைப் பயனற்றதாக்க விரும்பாமல் ஒரு பத்திரிகைக்கு அனுப்பி வைத்தேன். எதிர்பாராத விதமாக அந்த இரண்டாவது கதையும் வெளியாகிவிட்டது. நேர்மையற்ற ஊழல் அதிகாரிகளை எதிர்த்து நடைபெறும் இயக்கத்திற்கு தலைமைதாங்கும் ஒரு தொழிலாளியைப் பற்றிய கதை அது.

நான் இதில் பெருமை கொள்வதைவிட இயக்குனர் வாங், எனது வேலைகளை நான் சரியாக கவனிப்பதில்லை என்று விமர்சனம் செய்வாரே என்றுதான் பயந்து கொண்டிருந்தேன்.

நான் எதிர்பார்த்தபடியே இயக்குனர் என்னைத் தனது அறைக்கு அழைத்தார். ஆனால் முன் போல அவரது முகத்தில் கடு கடுப்பு இல்லை. நான் ஆச்சரியப்படும்படியாக இயக்குனர், ''ஹுவங், உனது இந்தக் கட்டுரை மிக நன்றாகவே அமைந்துள்ளது. (சிறுகதைகளை அவர் எப்போதுமே கட்டுரை என்றுதான் சொல்வார். நீ ஒரு நேர்மையான எழுத்தாளன் என்பதை நான் நன்கு உணர்ந்து கொண்டேன். நீ ஊக்கத்தோடு இந்தத் திறமையை பயன்படுத்திய எழுத்தாளன் என்பதை நான் நன்கு உணர்ந்து கொண்டேன். நீ ஊக்கத்தோடு இந்தத் திறமையை வளர்த்துக் கொள்ள வேண்டும். நீ மேலும் மேலும் தொடர்ந்து எழுதிக் கொண்டிருக்க வேண்டும். இன்னும் சிறந்த கட்டுரைகளை நீ எழுத வேண்டுமென்று நான் விரும்புகிறேன்,'' என்று ஊக்கப்படுத்தினார்.

# 42 தேர்தல்

''நமது தொழிற்சாலை பிரிவில் இருந்து இருவரை நமது பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்க நாம் இங்கு கூடியுள்ளோம். இது ஒரு முக்கியமான விஷயம் என்று உங்கள் அனைவருக்கும் தெரியும்.''

தனது குரலைத்தானே புகழ்ந்து கொள்வது போல தனது தொடக்க உரைக்குத் தானே தனது தலையை ஆட்டிக் கொண்டார். தொழிற்சாலை இயக்குனர் ஷெங்.

பல நிமிஷமௌனத்திற்குப் பின் நீண்ட அனுபவம் உள்ள தொழிலாளி லியூ எழுந்து துணிவுடன் பேசலானார்:

''லேஷிகுய் எப்போதும் நம் அனைவருக்கும் உதவிகரமாக இருந்து வருகிறார். அவரை நான் சிபார்சு செய்கிறேன்''

''ஃபூலிங்கை நியமிக்க நான் விரும்புகிறேன். அவர்தான் அடிக்கடி மக்கள் சார்பாக வாதாடுகிறவர்.'' என்று பின்புறமிருந்த மா சட்டென தெரிவித்தார்.

இதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த இயக்குனரின் கண்கள் விரிந்து நெற்றிசுருங்கியது. மீண்டும் அனைவரும் அமைதி யாயினர்.

பிறகு இயக்குனர் தனது சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து அதை விரித்தார்.

''தோழர்களே . இதில் குறிப்பிட்டுள்ள இரண்டு தோழர்களையும் நமது தொழிற் சங்கத்தின் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுப்பது முறையானதாக இருக்கும் என்று கருதுகிறோம்.''

முன்னால் அமர்ந்திருந்த அங்கத்தினர்களது பார்வைக்காக அந்தக் கடிதத்தை சுற்றுக்கு அனுப்பிவிட்டு மேற்கொண்டு பேசினார்.

''அவர்கள் ஷௌ ஹாங்வேய், ஷாங்ஷுன், இருவரும் இளைஞர்களாக இருந்தாலும் அவர்கள் வெகு சீக்கிரத்தில் அனுபவம் பெற்றுவிடுவார்கள். இதை நீங்கள் ஆட்சேபிக்க மாட்டீர்கள். சரிதானே?''

மௌனம் தான் பதில்.

சில நாட்களுக்குப் பிறகு தொழிற்சாலையின் அறிவிப்புப் பலகையில் சிவப்பு நிறத்தில் ஒரு பெரிய நோட்டீஸ் ஒட்டப்பட்டிருந்தது.

அதில்,

''தொழிற்சாலையிலுள்ள சகல தொழிலாளர்களும் தங்கள் தொழிற்சங்கப் பிரதிநிதிகளாக.

1. ஷௌ ஹாங்வேய்

2. ஷாங்ஜுன்

ஆகிய இருவரையும் ஏகமனதாகத் தேர்ந்தெடுத்துள்ளார்கள்,'' என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

சில வாரங்கள் சென்றபிறகு தொழிற்சாலையில் இருந்து முன் மாதிரியான தொழிலாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டிய சந்தர்ப்பம் நேரிட்டது. எல்லா சம்பிரதாயங்களும் முன்போலவே நடந்தது.

இயக்குனரின் வழக்கமான பேச்சுக்குப் பிறகு முன் போலவே கூட்டத்தில் மௌனம் நிலவியது.

ஃபூஜிங் பொறுமை இழந்தவராய் எழுந்து நின்று பேசினார்:

''இயக்குனர் அவர்களே தங்கள் சட்டைப் பையில் வைத்துள்ளவர்களையே தேர்ந்தெடுக்கலாம் என்று நான் முன்மொழிகிறேன்.''

கூட்டம் நடை பெற்ற அரங்கம் முழுவதும் பலமான சிரிப்பு அலை முழங்கியது.



# 43 வீடு மாற்றம்

அன்று ஞாயிற்றுக்கிழமை. காலை உணவு அருந்திவிட்டு வெளியே வந்தபோது ஜாங்கின் வீட்டின் முன்பாக ஆரஞ்சு நிறத்தில் டயோட்டா லாரி ஒன்று நின்றதைக் கண்டேன்.

சற்று நேரத்தில் அவரது வீட்டில் இருந்த சாமான்கஎெல்லாம் லாரியில் ஏற்றப்பட்டன. ஜாங் பதவி உயர்வு பெற்றுள்ளார்.

அவர் குடியிருந்த பகுதியிலுள்ள வீடுகள் யாவும் 1950ல் கட்டப்பட்ட சிற்றடக்கமான வீடுகள். இந்த வீடுகளின் முன்புறமிருந்தும் பின்புறமிருந்தும் அடிக்கடி வெளியேறும் சாக்கடை நீர் தெருவில் தேங்கிக்கிடந்து கொசுக்களையும் ஈக்களையும் வளர்த்துவிட்டு துர்நாற்றத்தையும் பரப்பிக் கொண்டிருந்தது.

பதவி உயர்வு பெற்றவர்கள் வசதியான புதிய வீடுகளில் குடி ஏறிவிட்டனர். இங்கு பக்கத்து வீடுகளெல்லாம் ஒன்றுக்கொன்று நெருக்கமாகக் கட்டப்பட்டிருந்தன. யாருடைய குடும்பத்திலாவது ஏதாவது பிரச்சினைகள் எழுந்தால் எல்லோரும் உதவிக்கு விரைந்து வருவார்கள்.

''ஜாங் நீங்கள் ஒரு இலாகாவின் ஒரு பிரிவின் தலைவராக பதவி உயர்வு பெற்றுவிட்டீர்கள். இல்லையா?'' என்று லாரியில் சாமான்கள் ஏற்றி உதவி செய்து கொண்டிருந்தவர்கள் கேட்டனர்.

எல்லோருக்கும் சிகரெட்டுகளைக் கொடுத்துக் கொண்டிருந்த ஜாங் புன்னகை செய்தார். ''நாங்கள் புதிய வீட்டிற்குச் சென்று குடி அமர்ந்ததும் நீங்கள் எல்லோரும் எங்கள் வீட்டிற்கு வரவேண்டும்,'' என்று முகமலர்ச்சியோடு சொன்னார்.

''நிச்சயம் நாங்கள் அங்கு வந்து பட்டாசு மத்தாப்புகள் கொளுத்துவோம்,'' என்று எல்லோரும் ஒத்துக் கொண்டோம்.

ஒரு குடும்பம் இடம் பெயர்ந்து வேறு வீட்டில் குடியேறினால் நண்பர்கள் அனைவரும் சேர்ந்து பட்டாசு, மத்தாப்புகள் வாங்கிச் சென்று புதிய வீட்டின் முன்பாகக் கொளுத்தி விழாவைப் போலக் கொண்டாடுவது வழக்கம். புது வீட்டில் குடிஏறியவர்கள் நண்பர்களை வரவேற்று விருந்தளித்து உபசரிப்பார்கள். பரஸ்பரம் நல்லெண்ணத்தைப் பரிமாறிக் கொள்ளும் நிகழ்ச்சியாக இந்தப் பழக்கம் இருந்து வருகிறது.

ஷென் ஒரு சிறந்த தொழில் நிபுணன். இந்தக் குடியிருப்பில் கடைகோடி வீட்டில் வசித்து வந்தான். அவன் ஒருவன் மட்டுமே இந்த நடவடிக்கைகளில் கலந்து கொள்ளாதவன். கையில் வாளியுடன் நடந்து வந்த அவன் நாங்கள் சுறுசுறுப்புடன் இயங்கும் காட்சியை வழக்கம்போல அவ நம்பிக்கையோடு பார்த்தபடியே நின்றான்.

அவனை எனக்குப் பிடிக்காது. நாங்கள் பேசிக் கொள்வதும் அபூர்வமாகத்தான். நாங்கள் ஒரே துறையில் வேலை செய்தாலும் எப்போதாவதுதான் சந்தித்துக் கொள்வோம். எங்கள் தொழில் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. நான் வேலை செய்யும் பிரிவு நகரின் கிழக்குப் பகுதியிலும், ஷென் வேலை செய்யும் பிரிவு மேற்குப் பகுதியிலுமிருந்தது. சில வருஷங்களுக்கு முன் ஒருவர் குடி பெயர்ந்தபோது ஷென் முகத்தை தொங்கபோட்டுக் கொண்டு பார்த்துக் கொண்டே போய்விட்டான். புதியவீடுகளுக்குக் குடியேறுகிறவர்களைக் கண்டு அவன் பொறாமைப்பட்டான். பண விஷயத்தில் மகா கஞ்சன். பட்டாசு வாங்க 35 ஃபென் கொடுக்கக்கூட அவனுக்கு மனம் வராது. என்றாவது ஒருநாள் அவன் புதியவீட்டில் குடிபுகும் போது ஒருவர்கூட அவனுக்கு வாழ்த்துக் கூறப்போக மாட்டார்கள்.

அவன் போகும்போது அவன் கையில் உள்ள வாளியில் என்ன இருக்கிறது என்று பார்த்தேன். சுவரில் வெள்ளை அடிக்கும் சுண்ணாம்பு இருந்தது. அவன் புது வீட்டிற்குக் குடிபோவது போல் தோன்றியது.

15 நாட்கள் சென்ற பிறகு எனக்கு ஒரு பிரிவின் உதவி அதிகாரியாகப் பதவி உயர்வு கிடைத்தது. புதிய இடம் பற்றி விசாரிக்க அலுவலகம் சென்றேன். அதிகாரி போன்று தோற்றமளித்த ஒருவர் சொன்னார்: ''ஜனங்கள் தங்களுடைய கஷ்டங்களை எங்களுக்கு எழுதித் தள்ளிக் கொண்டிருக்கிறார்கள். புது வீடுகள் ஒதுக்கும் முறையில் மாற்றம் செய்ய வேண்டியுள்ளது. இப்போது தேவையைப் பொறுத்தே வீடுகள் ஒதுக்க முடிவாகியுள்ளது.'' கதவைத் தள்ளிக் கொண்டு யாரோ ஒருவர் அலுவலகத்தில் நுழைந்தபோது இந்தப் புது விதி செய்தது யார் என்று ஏமாற்றத்துடன் கேட்டேன்.

''அதோ உள்ளே போகிறாரே புதிதாகப் பதவி உயர்வு பெற்ற தலைமை அதிகாரி அவர்தான் இந்த புதிய விதியைப் புகுத்தியவர்,'' என்று அலுவலகத்தில் நுழைந்த அதிகாரியை சுட்டிக்காட்டினார் அவர்.

உள்ளே எட்டிப்பார்த்தேன். அவர் வேறு யாருமல்ல. முன்பு எனது அண்டைவீட்டுக்காரராக இருந்த ஜாங்தான் அவர்.

*

# 44 மழைக்குப் பின்....

விடாது பெய்த மழையினால் மோசமாகப் பராமரிக்கப்பட்டு வந்த என் வீட்டின் மூன்று பக்க சுவர்களும் அடித்து செல்லப்பட்டுவிட்டன. இது 1950, 'அதிவேகப் பாய்ச்சல்'* கால கட்டித்தில் நிர்மாணிக்கப்பட்டவை. வீடு இப்போது திறந்த வெளி அரங்கமாகக் காட்சி தருகிறது. கட்சி செயலாளர், இயக்குனர், பொது நிர்வாக அதிகாரி ஆகிய மூவரும் நேரில் வந்து பார்வையிட்ட பிறகுதான், நான் பத்து வருஷங்களுக்கு முன்பே

* GREAT KEAP FOR WARD

புது வீடு ஒதுக்கக் கோரி விண்ணப்பித்திருந்ததை திடீரென உணர்ந்தார்கள். தற்சமயத்திற்கு எனது சாமான்களை வேறு இடத்தில் வைத்துக் கொள்ளும்படியும் முடிந்தால் வேறு இடத்தில் தங்கும்படியும் சொன்னார்கள்.

ஐந்து நாட்கள் சென்றதும் ராணுவ வீரர்கள் குடி இருப்புப் பகுதியில் எனக்கு இரண்டு அறைகள் கொண்ட வீடு ஒதுக்கப்பட்டது. செங்கற்களால் கட்டப்பட்ட ஓட்டுவீடு. உண்மையில் பார்ப்பதற்கு வீடு நல்ல தோற்றமளித்தது. எனக்கு ஒதுக்கிய வீட்டைவிட இங்கு சமீபத்தில் குடியேறியவர்களின் வீடு சிறந்ததாக இருந்திருக்க முடியாது. ஆகவே நான் பயந்து போனேன்.

எனது வீட்டுப் பிரச்சினையைத் தீர்த்து வைக்கத் தலைவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிக்கு நான் நன்றியுடையவனாக இருந்தேன். நான் புது வீட்டில் குடி அமர்ந்ததும் கட்சி செயலாளர் என்னிடம் வந்து எனக்கு வீடு ஒதுக்குவதற்காக அவர் மிகவும் பாடுபட்டதாகக் காட்டிக் கொண்டார்.

''ஹே இப்போது வீட்டுப்பிரச்சினை மிகக் கடுமையாக உள்ளது. உனது வீட்டு நெருக்கடியை உணர்ந்து அதற்கான தீர்வு காணும் பொறுப்பை நான் எடுத்துக் கொண்டேன். ஏனென்றால் நீ நீண்ட காலமாக உழைக்கும் தொழிலாளி. உனக்கு இந்த வீடு கிடைக்க வேண்டுமென்பதற்காக ராணுவ அதிகாரிகளிடம் பலவிதமான தந்திரோபாயங்களை நான் கையாள வேண்டி இருந்தது. எனது நேரடி முயற்சி இல்லாவிட்டால் வீடு ஆகாயக் கோட்டையாகத்தான் இருந்திருக்கும்.

இதை மனதில் எண்ணி செயலாளர் எடுத்துக் கொண்ட சிரமத்திற்குக் கைம்மாறாக ஏதாவது செய்ய வேண்டுமென்று தீர்மானித்தேன் நான். உடனே என் மனைவியிடம் செயலாளரை கௌரவிக்க மது வாங்கிவந்து கோழிக்கறி சமைத்து விமரிசையாக விருந்து செய்ய வேண்டுமென்று சொன்னேன்.

மறுநாள் இயக்குனர் என்னைப் பார்க்க வந்தார். ''எல்லாம் முறையாக செய்தால் முடிவும் சரியாக இருக்கும். நான் நேரடியாக உன் பிரச்சினையை எடுத்துக் கொண்டதால்தான் ராணுவக்குடி இருப்பில் உனக்கு ஒரு வீட்டை ஒதுக்கித்தர ராணுவ அதிகாரிகளை சம்மதிக்கும்படி செய்ய முடிந்தது. குடியிருக்க வீடு கோரி விண்ணப்பம் செய்தவர்களில் நீதான் என் பட்டியலில் முன்னுரிமை பெற்றிருந்தாய். எப்படியோ பன்னிரண்டு வருஷங்கள் சின்ன வீட்டில் முடங்கிக்கிடக்க வைக்கப்பட்டு விட்டாய்,'' என்று சொன்னார் நன்றிக் கடனை திருப்பிச் செலுத்தியாக வேண்டும். ஆக விருந்து செய்து உபசரித்து நமது விசுவாசத்தைக் காட்டிக் கொள்ள வேண்டும் என்று என் மனைவியிடம் கேட்டுக் கொண்டேன்.

மூன்றாவது நாள் பொது நிர்வாக அதிகாரி வந்தார். வீட்டை சுற்றிப் பார்த்துவிட்டு சொன்னார்: ''நீ அதிர்ஷ்டக்காரன்; அதனால்தான் இந்த வீட்டுக்கு நீ வந்திருக்கிறாய். உன்து வீட்டுக் கஷ்டத்தை ராணுவ அதிகாரிகளிடம் நான் விளக்கமாக எடுத்து சொன்னதால்தான் இந்த வீட்டை உனக்கு ஒதுக்க சம்மதித்தனர். என்ன இருந்தாலும் நீ பல வருஷங்களாக என் மேற்பார்வையில் வேலை செய்து வருகிறாய் அல்லவா?''

இந்த நிர்வாக அதிகாரியும் என் மீது இரக்கம்காட்டி இருக்கிறார். இவருக்கும் சிறப்பாக விருந்து வைத்து எனது செய்நன்றி மறவாமையைக் காட்டிக் கொள்ள வேண்டும்.

எப்படியானாலும் இந்த அதிகாரிகளுக்கு நான்பட்டிருக்கும் நன்றிக்கடனை ஒருபோதும் அடைத்துத் தீர்க்க முடியாது என்று உணர்கிறேன்.

குடி இருக்க எனக்கு வீடு கிடைத்திருப்பது என்னவோ உண்மைதான். ஆயினும் இதற்கான சகல பெருமையும் விடாது பெய்த பெருமழையைத்தான் சேரும்! ஆனால் இந்த மழைக்கு நன்றி தெரிவிக்க நான் விருந்து வைக்க வேண்டிய அவசியம் இல்லை!



# 45 குறு நகை

''நான் மிகவும் எளிமையாக இருப்பதாக நீ நினைக்கிறாய் அல்லவா? இந்த நாள்காட்டிகளில் இருக்கும் எனது படங்களில் ஒன்று கூட எனக்கு மனநிறைவு அளிப்பதாக இல்லை. ஆடை, ஆபரணம் மற்றும் ஒப்பனைகளுடன் புகைப்படக்காரர்களின் முன்னேற்பாட்டின்படி ஏரிக்கரையிலும், பூச்செடிகளுக் கிடையிலும் நின்று காட்சி கொடுத்தது. இவை எல்லாம் எனக்கு சலித்துவிட்டது.''

அவளும் நானும் கடற்கரையில் நடந்து சென்று கொண்டிருந்தோம்.

''ஒரு நாள் ஒரு புகைப்பட நிபுணர் என்னைப்படம் எடுத்து புதிதாக ஆரம்பிக்கப் போகும் தனது ஸ்டுடியோவின் கண்ணாடிக் காட்சிப் பெட்டிக்குள் அந்தப் படத்தை வைப்பது சம்பந்தமாக என்னுடன் பேச விரும்பினார். கலைகள் பற்றி அவர் சில விஷயங்கள் தெரிந்தவராகவும், அதில் மேலும் திறமையை வளர்த்துக் கொள்ள விருப்பம் உள்ளவராகவும் எனக்குத் தோன்றியது. எனது குறுநகை அன்னை மேரியினுடையது போன்றும் அவரது கணிப்பு. ஓவியர் ரபேலின் மிகச் சிறந்த படைப்பான 'அழகிய தோட்டக்காரி' போன்ற உயர்ந்த ஒரு சித்திரம் தீட்ட விரும்பினார். ஒரு நாட்டியக் குழுவிலிருந்து இதற்குத் தேவையான விசேஷ ஆடை ஆபரணங்கள் இரவலாகப் பெறப்பட்டன. மரங்கள் அடர்ந்த பசுமையான மலைச்சாரல் களையும், அமைதி தவழும் ஆற்றங்கரைகளையும், பரந்த வயல் வெளிகளையும் பின்னணியாக வைத்துப் படங்கள் எடுக்க விரும்பினார்.''

''சராசரி நபர்களுக்கு இது உண்மையில் இயற்கையானதாகத் தோன்றி இருக்கலாம். ஆனால் நான் இந்த ஏற்பாட்டுக்கு உடன்பட மறுத்துவிட்டேன். இது அன்னை மேரியையோ குழந்தை

இயேசுவையோ பிரதிபலிக்காது. இது வெறும் அற்பமான விளம்பரம்தான்.''

மோனோலிசாவினுடையது போன்று அவ்வளவு கவர்ச்சிகரமாக இல்லாவிட்டாலும் அவளது புன்முறுவல் வசீகரமானதுதான்.

''மன்னிக்கவும். இப்படிப்பட்ட தெளிவான உனது கருத்துகளுக்கு என்னால் அபிப்பிராயம் சொல்ல இயலவில்லை,'' என்று கூறிவிட்டேன்.

தன்னை சொக்கி இழுக்கும் மேலைக் கடலை முத்தமிட மாலைக் கதிரவன் மூழ்கியபோது அவனது முகம் செக்கச் சிவந்திருந்தது. எங்களது எதிர்பாராத மகிழ்ச்சியைக் கண்டு தங்கள் ஆச்சரியத்தை வெளியிட கடல் அலைகள் ஆர்ப்பரித்து சத்தமிட்டு வந்து கரையில் மோதிக் கொண்டன.

''அதோ பார் ஒரு பாய் மரக்கப்பல்,'' என்றாள். உண்மையில் ஒரு பாய்மரக்கப்பல் அடிவானத்தில் தன் தலையைக் காட்டியது.

''உப்பங்காற்றில் தவழ்ந்து வரும் மீனவர்களின் பாடல்களைக் கேட்டிருக்கிறாயா?'' என்று சொல்லி நான் பாடியதைக் கவனமாகக் கேட்டான். சில நொடிகளில் ஒரு குழந்தையைப்போல கடலைநோக்கி ஓடினாள். கடல் நுரைகள் கரையில் வந்து சிதறின. கடல் காற்று அவளது ஆடையின் கீழ் பாகத்தை ஆட்டியது. தொலைவில் தெரியும், திரும்பி வந்து கொண்டிருக்கும் பாய்மரக் கப்பலை நோக்கி சமிக்ஞை செய்வது போல் தனது வெண்ணிறக் கைக்குட்டையை ஆட்டினாள். மிகத் துரிதகதியில் இந்தக் காட்சியை நான் படம் எடுத்துவிட்டேன்.

நான் அவளிடம் படத்தைக் கொடுத்தபோது ஆச்சரியத்துடன், ''மிகப்பிரமாதம்,'' என்றாள்.

''நீ தான் இதில் பிரமாதமாகப் பேரெழிலுடன் இருக்கிறாய்,'' என்றேன்.

பிறகு 'திரும்பி வரும் பாய்மரக் கப்பல்' என்று தலைப்பிடப்பட்ட இப்படம் பரிசு பெற்றது. ஒரு பத்திரிகை ஆசிரியர் அந்தப் படத்திலிருந்து இவளது உருவப்பகுதியை மட்டும் கத்தரித்து எடுத்து தனது சஞ்சிகையில் முகப்பு அட்டையில் அச்சிட்டுவிட்டார். அவர் தந்திரக்கார மனிதர். அவளது இதயத்தைப் படம்பிடித்துக் காட்டுவது போல் அவளது குறுநகை பொலிவுடன் தோற்றமளித்தது.



## 46 எப்படி அழைப்பது?

முன்பு என்னுடன் சேர்ந்து படித்தவரும், எனது நண்பருமான ஜாங், ஏ நகரத்தின் ஒரு துறையின் தலைமை அதிகாரியாக இருக்கிறார். சமீபத்தில் தான், அந்த நகரத்திற்குச் சென்று அவரைப் பார்க்க முயற்சி செய்தேன்.

அவரும் அவரது குடும்பத்தாரும் ஒரு அடுக்கு மாடி குடியிருப்பில் மூன்றாவது மாடியில் வசித்து வந்தனர். ஆவலோடு சென்று அவர்கள் வீட்டுக் கதவைத்தட்டினேன். பாதிக் கதவைத் திறந்து ஒரு பையன் தலையை நீட்டி, ''யாரது'' என்று கேட்டான்.

''தலைமை அதிகாரி ஜாங் இங்குதான் வசிக்கிறாரா?'' என்று ஆர்வத்துடன் கேட்டேன்.

அந்த சிறுவன் சற்றே என்னை மேலும் கீழுமாகப் பார்த்துவிட்டு, ''எனக்குத் தெரியாது!'' என்று சொல்லி முடிப்பதற்குள்ளாகவே கதவைச் சாத்திவிட்டான்.

பையனின் முரட்டுத்தனமான நடவடிக்கையால் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப் போனேன். அசட்டுச் சிரிப்புடன் வாய்பிளந்தபடி அங்கேயே சற்றுநேரம் நின்றேன்.

எவ்வளவு முரட்டுக் குணமுடையவன் இப்பையன்! பெருமூச்சு விட்டேன். பிறகு நம்பிக்கையோடு எதிர்வீட்டுக் கதவைத் தட்டினேன். ''மன்னிக்கவும்; இந்த நகரத்தின் தலைமை அதிகாரி ஜாங் எதிர் வீட்டில்தான் வசிக்கிறாரா?'' என்று கேட்டேன்.

''ஆம்''. பலத்த ஓசையுடன் அந்த வீட்டின் கதவும் மூடப்பட்டது. உண்மையாகவே நான் இப்போது ஆத்திரமடைந்தேன். வீடு தேடி வருகிறவர்களிடம் இந்த ஜனங்கள் ஏன் இப்படி கெடுபிடியாக நடந்து கொள்கிறார்கள்.

மீண்டும் முயன்று பார்க்கலாம், என்று எண்ணி எனது பள்ளித் தோழனின் வீட்டுக் கதவருகில் நின்று ''ஜாங்பவோகுயிங்'' வீட்டிலிருக்கிறாரா?'' என்று உரத்த குரலில் கேட்டேன்.

இம்முறை கதவு பரக்கத் திறந்து கொண்டது. அதே பையன் தான் மீண்டும் தோன்றினான்.

''மாமா, அப்பா வெளியில் போயிருக்கிறார். நீங்கள் உள்ளே வந்து உட்காருங்கள்.'' அவனது மனோபாவம் மாறி இருந்தது. மேலும் அவனது நேச பாவமற்ற முகத்தில் புன்னகை தவழ்ந்தது. அவனுக்கு எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கலாம். வசீகரமான முகத்தோற்றமுள்ள சிறுவன். நான் உள்ளே சென்று சோபாவில் அமர்ந்தேன்.

''நான் உன் அப்பாவின் நண்பன். நாங்கள் இருவரும் பல்கலைக் கழகத்தில் ஒன்றாகப் படித்தோம். முக்கியமாக உன் அப்பாவைப் பார்க்க வேண்டுமென்பதற்காகத்தான் நான் இங்கு வந்தேன்.''

என் பையிலிருந்து ஒரு பேனாவையும் ஒரு கைக் கடிகாரத்தையும் எடுத்து அவனுக்குக் கொடுத்தேன். அவனது முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது.

''இன்னும் சில நிமிஷங்களில் அப்பா வந்துவிடுவார். இங்கேயே ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நான் கடைக்குப் போய் சிகரெட் வாங்கி வந்துவிடுகிறேன்.''

அவனைக் கைகளால் அணைத்தபடியே, ''நீ இப்போதுஎன்னிடம் நல்ல பையனாகப் பழகுகிறாய். முதல் தடவை நான் கதவைத் தட்டியபோது நீ ஏன் என்னை உள்ளே விடவில்லை'' என்று கேட்டேன்.

''நீங்கள் தலைமை அதிகாரி என்று கூப்பிட்டீர்கள்.''

''உன் அப்பா தலைமை அதிகாரி தானே'' நான் குழப்பமடைந்தேன்.

''ஆம். தலைமை அதிகாரிதான். ஆனால் தனது பதவியின் பெயரைச் சொல்லி யாராவது தேடி வந்தால் அவர்களுக்குப் பதில் சொல்ல வேண்டாமென்றும், தன் பெயரைச் சொல்லி வருகிறவர்களை மட்டும் வீட்டில் அனுமதிக்கும்படியும் அப்பா என்னிடம் சொல்லி இருக்கிறார்,'' என்றான் பையன்.

இதைக் கேட்டு நான் திகைப்படைந்தேன். கல்லூரித் தோழனின் எளிமையை எண்ணிப் பெருமிதம் கொண்டேன். அவர் உயர் பதவியிலிருந்தும் கூட சாதாரண மனிதனாகவேதான் நடத்தப்பட வேண்டுமென்று விரும்புகிறார்.

''ஆக உனது அப்பா தன்னை யாரும் தலைமை அதிகாரி என்று அழைப்பதை வெறுக்கிறார். இல்லையா?''

''ஆம். அப்படித்தான். தன்னைத் தலைமை அதிகாரி என்று தேடி வருகிறவர்கள் அனைவரும் தன்னிடம் வழக்கமாக சலுகை பெற வருகிறார்கள் என்றும் ஒரு தடவை சொன்னார். மேலும் தனது பெயரைச் சொல்லி வருகிறவர்கள் தனது மேலதிகாரிகள் என்றும், அவர்கள் தன்னை கௌரவிக்க வருகிறவர்கள் என்றும் சொல்லி இருக்கிறார்,'' என்றான்.

எனது நண்பன் மீது நான் கொண்டிருந்த மதிப்பு குறைந்துவிட்டது. சிறுவன் தொடர்ந்து, ''என் அம்மா, பரிசு கொண்டு வருகிறவர்கள் யாராக இருந்தாலும் அவர்களை உள்ளே அனுமதிக்கும்படியாக சொல்லி இருக்கிறார்,'' என்றான்.



## 47 புன்னகைகள்

இரண்டு மாத இடைவிடாத பெரு முயற்சியின் பயனாக, டாஷோங் உணவு விடுதியில், சுறுசுறுப்பின்றி மந்தமாக வாடிக்கையாளர்களை கவனிப்பதை விமர்சித்து பத்திரிகையாளர் சென் யாபிங் எழுதிய கட்டுரை உள்ளூர் பத்திரிகையில் வெளியானதில் அவருக்கு அமோக செல்வாக்கு உண்டாயிற்று.

இதை ஒட்டி உண்மையைக் கண்டுபிடிக்கும் நிருபர்களின் கட்டுரைகளும், விடுதி நிர்வாகத்தின் சுயவிமர்சனமும், அதற்கேற்ப நிர்வாகம் எடுத்துக்கொண்ட சீர்திருத்த நடவடிக்கைகளும் பிரசுரமாயின. தனது விமர்சனத்தின் விளைவாக விடுதியில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களைத் தானே நேரில் கண்டறிய விரும்பி ஒரு நாள் சென்யாபிங் அந்த விடுதிக்குச் சென்றான்.

வாசலில் நின்றிருந்த ஒரு உபசரணைப் பெண் இவனைக் கண்டதும் எதுவும் பேசாமல் திடீரென சமையல் அறைக்கு விரைந்து சென்றாள். தன்னை உள்ளே அனுமதிக்க மாட்டார்களோ என்று அவன் ஏமாற்றமடைந்தான்.

ஆனால் அடுத்து நடந்தது சாதாரணமாக யாரும் நம்ப முடியாதது. தன்னைச் சுற்றி ஐந்தாறு பெண்க்ள் புன்னகை செய்தவாறு நின்றிருப்பதைக் கண்டான். நேர்த்தியான முக சாயல் உள்ள ஒரு பெண் புன்னகை செய்தவாறு அவன் அருகில் வந்து தேனீர் கொண்டு வரலாமா என்று கேட்டான்.

ஆனால் சென் தனக்கு மீன் வறுவலும் சாதமும் கொண்டு வருமாறு சொன்னான்.

நாற்காலியில் சாய்ந்தபடியே உற்சாகத்துடன் செங்யாபின் லேசாக சீழ்க்கை அடித்தான். இந்தக் கணம் தற்புகழ்ச்சிக்கான ஒரு கதையைத் தன்மனதிற்குள் கற்பனை செய்தபடி அதற்கு, ''பதில் புன்னகைகள்'' என்று தலைப்பிட்டுக் கொண்டான்.

மேலும், விமர்சனத்தைக் கேட்டுக் கொள்ளவும், அதற்கு உடன் பதில் சொல்ல வேண்டும் என்ற நோக்கத்துடன் புன்னகைத்தவாறு இன்னொரு பெண் வந்தாள். விமர்சனம் எதுவும் இல்லை என்றான் சென். நாற்காலியில் அமர்ந்தபடி அனைவரின் புன்னகையையும் ரசித்தவாறு அவன் முழு திருப்தி அடைந்ததாக சொன்னான்.

ஒரு பருமனான மாது, அவள் அணிந்திருந்த அடையாளச் சின்னத்திலிருந்து, அவள்தான் அந்த உணவு விடுதியின் நிர்வாகி என்று தெரிந்தது. அவள் சென்யாபிங்கை அணுகி இனிதே புன்னகை செய்தவாறு அவன் சாப்பிடக் கேட்ட மீன் வறுவல் இல்லை என்றும் சொன்னாள்.

பிறகு வறுவல் செய்த பன்றிஇறைச்சி வழங்கும்படி சொன்னான். ''அதுவும் தீர்ந்துவிட்டது,'' என்று புன் முறுவல் செய்தாள் நிர்வாகி.

''முட்டையில் பக்குவம் செய்தவை எதுவும் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''கடைசியாக இருந்த அதுவும் சற்று முன்பு பரிமாறப்பட்டு தீர்ந்துவிட்டது,'' என்று மாறாத நிரந்தர புன்னகையுடன் நிர்வாகி சொன்னாள்.

''அப்படியானால் உங்கள் விடுதியில் இருக்கும் எதையாவது கொடுங்கள்,'' என்றான் உற்சாகமின்றி.

மேலும் புது புன்னகை செய்தவாறு, ''உணவு வழங்கும் நேரம் (அதாவது வேலை நேரம்) முடிந்துவிட்டது,'' என்று நிர்வாகி அறிவித்தாள். இதை சென் புரிந்து கொள்வான் என்று அவள் நம்பினாள்.

ஒரு துண்டு துணுக்கைக்கூட சுவைக்காமல் உணவு விடுதியில்தான், நான்கு மணி நேரத்தை வீணாகக் கழித்துவிட்டதை எண்ணி விடுதியை விட்டு தள்ளாடியபடி வெளியே வந்தான் சென்.

அவன் வெளியே வந்தபோது அவன் பின்புறத்தில் சிரித்தவாறு ஒருபெண், ''மீண்டும் வருக'' என்று உரக்கச் சொன்னாள்.

எத்தனை கவர்ச்சிப் புன்னகைகள்!



## 48 எழுத்தாளர் தந்தி

இலக்கிய வட்டாரத்தில் வளர்ந்து வரும் ஒரு நட்சத்திர எழுத்தாளர் லூ.ஒன்பது வயதான தனது பெண்ணை கையில் பிடித்தபடி மிகுந்த உணர்ச்சிப் பெருக்குடன் அஞ்சல் அலுவலகத்திற்குச் சென்றார்.

அவரது 15,086 வார்த்தைகள் கொண்ட சிறுகதை பிரசுரமான வகையில் அவருக்குக் கணிசமான தொகை சன்மானமாகக் கிடைத்திருந்தது. இந்த சமயத்தில் வேறு காரியமாக வெளியூர் சென்றிருந்த அவரது மனைவியும் இந்த சந்தோஷச் செய்தியை பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று விரும்பி அவளுக்கு ஒரு தந்தி அனுப்ப முடிவு செய்தார்.

எழுத ஆரம்பித்தார். பத்து நிமிஷம் கழித்து தந்தி எழுதிய படிவத்தை கிழித்தெறிந்தார். மீண்டும் சில நிமிஷம் சென்று இன்னொரு காகிதத்தையும் கசக்கி பந்தாக உருட்டி வீசிவிட்டு மூன்றாவது ஒன்றை எழுதத் தொடங்கினார். மூன்றாவதும் அதேபோல எறியப்பட்டது.

''என்ன அப்பா ஒரு தந்தி எழுதுவது அவ்வளவு சிரமமாகவா இருக்கிறது?'' என்று அவரது மகள் லிங்லிங் தந்திஎழுதிக் கொண்டிருந்ததை எட்டிப் பார்த்தவாறு கேட்டாள். லூ மேலும் எழுதிக் கொண்டுதானிருந்தார்.

''உங்கள் சிறுகதைகளை மட்டும் எப்படி அப்பா அவ்வளவு சீக்கிரத்தில் உங்களால் எழுத முடிந்தது?''

வார்த்தைகளைக் குறைத்து சிக்கனம் செய்வது எப்படி என்று லூ சிந்தித்துக் கொண்டிருந்தார்!

''எனக்குப் பசிக்கிறது அப்பா,'' என்று லிங் அப்பாவின் முகத்தைப் பார்த்தாள்.

''உஸ், அசட்டுப் பெண்ணே என்னைத் தொந்தரவு செய்யாதே. தந்தியில் நாம் எழுதும் ஒவ்வொரு வார்த்தைக்கும் ஏழு ஃபென் கட்டணமாகச் செலுத்த வேண்டும். ஒரு வார்த்தையைக் குறைத்தால் அதனால் மிச்சப்படும் காசில் உனக்குப் பிரியமான சாக்லெட் வாங்கிக் கொடுக்க முடியும் என்ன புரிகிறதா?'' என்று மகளிடம் விளக்கமாக சொன்னார் லூ.





# 49 சிறந்த சிறுகதை

''ஏ நண்பா எனக்கு நீ ஒரு உதவி செய்ய வேண்டும். அது என் வாழ்நாள் முழுவதற்குமான சந்தோஷம் பற்றியது. சொல்லப் போனால் அது எனக்கு சாவா, வாழ்வா என்பதை நிர்ணயிக்க வல்லது.'' என்று ஒரு இளம் எழுத்தாள நண்பனிடம் ஒரு வாலிபன் கேட்டுக் கொண்டான். ''மேலும் தேவையான சமயத்தில் கை கொடுத்து உதவி செய்வதுதான் உண்மையான நட்பின் இலக்கணமாகும்.'' என்றும் சொன்னான்.

இளம் எழுத்தாளன் வழக்கமாகத் தன் இலக்கியப் படைப்பிற்குக் கதைக்கானக் கருவைத் தேடுவதில் ஆர்வத்தோடு இருப்பவன். இன்று தனது நண்பனின் வேண்டுகோளை கேட்டு அசட்டையாக இருந்தான்.

''வாழ்க்கைக்கு நட்பு தேவைப்படுகிறது என்றுதான் நானும் நினைக்கிறேன். உனக்கு என்ன வேண்டுமென்று என்னிடம் நீ கேட்கிறாய்?'' என்றான்.

''நான் எழுதியதாக என் பெயரில் நீ ஒரு சிறுகதை எழுதித் தர வேண்டும். ஒரு நிமிஷத்தில் படித்து முடிக்கக்கூடியதாக எழுநூறு அல்லது எண்ணூறு வார்த்தைகளில் அந்தக்கதை அமைந்திருந்தால் போதுமானது. உனது அரைமணி நேர உழைப்பின் மூலம் நான் காதலிக்கும் பெண்ணை, என்னை மணந்து கொள்ள இணங்க வைக்க முடியும்,'' என்று சொல்லி தன் இரு கைகளையும் சேர்த்து நெற்றியில் வைத்து தன் தலையை பூமியில் தாழ்த்தி தனது மரியாதையை அந்த இளைஞன் தெரிவித்துக் கொண்டான். (சீனாவில் மரியாதையை தெரிவித்துக் கொள்ளும் முறை KOWTOW)

''ஒரு நிமிஷக் கதையினால் காதலில் வெற்றிபெற முடியுமா?'' என்று வியந்த எழுத்தாளனின் கண்கள் அகல விரிந்தன.

''உண்மைதான். உன்னால் கற்பனை செய்ய முடியாத அளவு அந்தப் பெண் சிறந்த அழகியாகவும் அதே சமயம் மிகுந்த கர்வத்தோடும் இருக்கிறாள். அவளது அழகும் கல்வி அறிவும் சிறந்த கல்விமான் ஒருவனைத்தான் திருமணம் செய்து கொள்வேன் என்ற நிலைக்கும் அவளைத் தள்ளி உள்ளது. உனது சிறுகதையைப் பயன்படுத்தி, அது எனது ஒப்பு உயர்வு அற்ற இலக்கியப் படைப்பு என்று அவளிடம் நான் காட்டிக் கொள்ள முடியும். இப்படி சீன இலக்கியத்திலும், அயல் மொழியிலும் பாண்டித்யம் பெற்ற ஒருவனை ஒரு பெண்ணால் எப்படி மறுத்துவிட முடியும்.''

இதைக் கேட்ட எழுத்தாளன் பெருமூச்சுவிட்டான். தனது தலையை ஆட்டியபடியே ''உனது காதலின் வெற்றிக்காகவும் எனது நட்பின் அடையாளமாகவும் உனக்கு ஒருகதை எழுதித் தருகிறேன். ஆனால் எதைப்பற்றி எழுதுவது?'' என்றான்.

''இது நல்ல கேள்விதான்! நீ ஒரு எழுத்தாளன், சிறு கதை மன்னன். ஏதோ ஒரு கதை புனைந்து கொடேன்.'' என்று தலையைச் சொறிந்து கொண்டு பல்லை இளித்தபடியே சொன்னான். பிறகு அந்த எழுத்தாளனும் உற்சாகமடைந்து அவனது நண்பனின் முன்யோசனையினை எதிர் காலம் பற்றிய நம்பிக்கையை மையக் கருத்தாக வைத்து தன் நண்பனின் பெயரில் சிறுகதை ஒன்று எழுதி ஒரு சஞ்சிகைக்கு அனுப்பி வைத்தான். இரண்டு வாரத்தில் அந்தக் கதையும் பிரசுரமாகிவிட்டது.

கதை வெளியான அன்றே எழுத்தாளன் தனது நண்பனை தொலைபேசியில் அழைத்து அந்தக் கதை, அந்தப் பெண்ணின் காதல் அன்பைப் பெற்றுத் தந்ததா என்று கேட்டான்.

அந்த வாலிபனின் மகிழ்ச்சி பொங்கும் குரல் தொலைபேசியில் ஒலித்தது. ''ஆம் உங்கள் கதை நன்கு வேலை செய்திருக்கிறது. கதைக்காக சன்மானமாகக் கிடைத்த பணத்தில் ரோஜாப்பூச் செண்டு ஒன்றுவாங்கிக் கொண்டு போய் அவளுக்குப்

பரிசாக அளித்தேன். உடனே என்மீது அவளுக்குள்ள காதலை ஊர்ஜிதம் செய்தாள்.''

எழுத்தாளன் திருப்தியுடன் பெருமூச்சுவிட்டான். ஒரு நண்பன் தனது வாழ்வின் லட்சியத்தை அடைய அவன் பேருதவி செய்திருக்கிறான். இப்போது புதிய கதைக் கருவிற்கான தேடலில் சிந்தனை வயப்பட்டிருந்தான்.

எப்படியோ இரண்டு நாட்கள் கழித்து வாடிய முகத்துடன் அந்த வாலிபன் மீண்டும் எழுத்தாளனிடம் வந்தான்.

''தயவு செய்து எனக்கு இன்னொரு பெரிய உதவி செய்ய வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டான்.

''என்னால் ஒரு சிறு கதையை எழுத முடியுமானால் எவ்வித பிரச்சினையுமின்றி ஒரு முழு நீள நாவலையும் என்னால் எழுத முடியுமென்று என்காதலி சொல்கிறாள். மேலும் அந்த நாவல் பிரசுரமானதும் அதற்காகக் கிடைக்கப் போகும் சன்மானத்தைக் கொண்டு எங்கள் திருமணத்தையும் நடத்திக் கொள்ளலாம் என்றும் சொல்கிறாள்,'' என்றான்.

இம்முறை எழுத்தாளனால் உதவி செய்ய முடியவில்லை. அவனது நண்பனின் வருங்காலம்பற்றிய ஆருடம் ஒரு முழு நாவல் எழுதப்போதுமான கருப்பொருளாக இல்லை. ஆனால் அது ஒரு சிறந்த சிறுகதை புனையப் போதுமானது.



## 50 இப்படி ஒரு பிளவு

நீ ஒரு மர்மத்தைக் கண்டு பிடித்தாய். உனது கணவன் பகல் நேரப் பணியில் இருந்தபோது நீ அன்று பகல் விடுமுறையில் வீட்டிலிருந்தாய். வீட்டில் நீ புத்தக அலமாரியை சுத்தம் செய்து மீண்டும் புத்தகங்களை ஒழுங்காக அடுக்கிக் கொண்டிருந்த போது, கல்லூரிப் பாடப்புத்தகம் ஒன்றிலிருந்து ஒரு புகைப்படமும் ஒரு கடிதமும் கீழே விழுந்தது.

அந்தப் புகைப்படத்தில் இருந்த பெண்ணின் கண்கள் பெரிதாகவும் இமையின் ரோமங்கள் நீளமாகவும் இருந்தன. அவளது கூந்தல் தோள்வரை தொங்கிக் கொண்டிருந்தது. உனக்கு அவள் யாரென்று தெரிந்துவிட்டது. உனது திருமண நிகழ்ச்சியில் கலந்துகொள்ள நூறு லீ* தூரம் கடந்து அவள் வந்திருந்தாள். அவள் உன் கணவனோடு கல்லூரியில் சேர்ந்து படித்தவள். அவனது முந்தைய சிநேகிதியுமாவாள். இதை ஒரு தடவை அவன் உன்னிடம் ஒத்துக் கொண்டுமிருந்தான். அவளது பெற்றோர்கள் ஆட்சேபித்ததால் அவர்களது திருமணம் நடைபெறாமல் போய்விட்டது.

காதல் அன்பும் உணர்ச்சிப் பிரவாகமும் அந்தக் கடிதத்தில் பொங்கி வழிந்தது.

நீ அவனை சந்திப்பதற்கு சில வருஷங்களுக்கு முன்பு அந்தக் கடிதத்தை அவள் எழுதி இருந்தாள்.

வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டபிறகு அவன் எதற்காக அந்தக் கடித்தையும், புகைப்படத்தையும் இன்னும் வைத்துக் கொண்டிருக்க வேண்டும்? அவன் இன்னும் அவளை மனப்பூர்வமாகக் காதலிக்கிறானா?

உனது கற்பனையை சிறகடித்துப் பறக்கவிட்டுக் கொண்டிருந்தாய்.

அவன் உன்னிடம் மிகுந்த அன்போடுதான் இருக்கிறான். அவன் சுவையான உணவு வகைகளை சமைக்கிறான். ஒரு பொட்டு, புள்ளி அழுக்குக்கூட இல்லாதவாறு அவ்வளவு நேர்த்தியாக துணிகளை சுத்தம் செய்கிறான். நீமனம் சோர்ந்திருந்த போது. ''சந்தோஷமாக சிரித்துக் கொண்டிருப்பதற்கு'' என்று உன்னை சினிமாவுக்கு அழைத்துப் போனான். பல்கலைக் கழக நுழைவுத்தேர்வு எழுத நீ வீட்டில் இருந்தே படித்துக்

* ஒரு லீ, சுமார் ½ கி.மீ.

கொண்டிருந்தபோது அவன் உனக்கு குணமாறுபாடு, அளவு மாறுபாடு, தத்துவங்களையும் திறமையுடன் விரிவாக விளக்கி உனக்கு உதவினான். மேலும் ஒத்தெல்லோ, டெஸ் முதலிய கதைகளையும் உனக்குப் போதித்திருந்தும்.......இந்தக் கடிதமும் புகைப்படமும் இங்கு இருப்பதன் நோக்கம் என்னவாக இருக்கும்? நீ வியப்படைந்தாய்.

இதைக் கண்டுபிடிக்க நீ தீர்மானித்து விட்டாய். நேரடியாகக் கேட்கலாமா? அது பயனளிக்காது. அதை மறைக்க அவன் ஏதாவது வழி கண்டுபிடித்துவிடுவான். நீயாகவே அதை வெளிக் கொணர முயற்சி செய்யலாமா கூடாது; இதில் அதிகமாக உன் சக்தியை இழக்க வேண்டியதாகிவிடும். நீ மேலும், மேலும் சிந்தனை செய்தாய். இறுதியில் ஒரு திட்டம் உருவாயிற்று.

அவளது கை எழுத்தில் அவனுக்கு நீ ஒரு கடிதம் வரைந்தாய்:

அன்பார்ந்த ஷோன் குயிங்,

''நான் ஒரு மகா நாட்டில் கலந்து கொள்வதற்காக இந்த நகரத்திற்கு வந்திருக்கிறேன். இங்கு நிகழ்ச்சி நிரலில் அலுவல்கள் நிறைய உள்ளன. ஆகவே உங்களை வீட்டில் வந்து சந்திக்க எனக்கு நேரம் கிடைக்காது. அதனால் நாளை மாலை 7 மணிக்கு இளைஞர் பூங்காவின் நுழை வாயில் அருகில் உங்களை சந்திக்க விரும்புகிறேன். நிச்சயம் நீங்கள் அங்கு வரவும்''

ஸியாவோபிங் இந்தக் கடிதத்தை தபால் பெட்டியில் சேர்த்ததும் போரில் வெற்றி கொண்ட ராணுவ தளபதியாக உன்னை நீ எண்ணிக் கொண்டாய்.

மறுநாள் பிற்பகல் வேலை முடிந்ததும் அந்தக் கடிதத்தை அவன் உன்னிடமே கொடுத்தான். அதை புன் சிரிப்போடு வாங்கிப் படிப்பது போல் பாசாங்கு செய்தாய்.

''இது விநோதமானது, இந்தக் கடிதத்தில் திருப்பி அனுப்ப வேண்டிய முகவரி இல்லை. மேலும் அவள் எங்கு தங்கி

இருக்கிறாள் என்ற விபரத்தையும் தெரிவிக்கவில்லை. நாம் இருவரும் சென்று பூங்காவில் தேடிப்பார்க்கலாம்,'' என்றான்.

உனது திட்டம் பயனளித்துவிட்டது. நீ அவனைத் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டாய். அவனது பேச்சைக் கேட்ட நீ வாய்க்குள் அடக்கமாக சிரித்துக் கொண்டாய். அவளுடைய படத்தை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு, இந்தக்கடிதம் உனது கை வேலை என்று சொன்னாய்.

உற்சாகமின்றி அவனது வார்த்தைகள் வெளிவந்தன. ''இந்தப் படத்தை அவளுக்குத் திருப்பி அனுப்பி வைக்க நினைத்தேன். ஆனால் அதைத் தேடிக் கண்டுபிடிக்க என்னால் இயலாது போயிற்று. ஆனால் இப்போது நீ இவற்றை கண்டெடுத்து விட்டாய்.''

அவன் தனது பேச்சை முடிக்கவில்லை. ஆனால் இமை கொட்டாது தன் கண்களால் சுட்டுவிடுவது போன்று உன்னை உற்று நோக்கினான். அன்று இரவு முழுவதும் அவன் வாய் திறந்து ஒரு வார்த்தை கூட உச்சரிக்கவில்லை.



